ௐ











# காசி விசாலாட்சி அம்மன் கோவில் குடமுழுக்கு மலர்

1.11.1971



ஃ

## மலர் மணம்





உ

சிவமயம்





# காசி விசாலாட்சி அம்மன் கோவில்

# குடமுழுக்கு மலர்

பதிப்பாசிரியர்

'சோமலெ'

1—11—1971

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்

மானேஜிங் சொசைட்டி

மேலமடம்

காரைக்குடி - 1



துண்டி விநாயகர்

## துண்டி விநாயகர்

துண்டிராஜா என்பவர் காசியில் ஆட்சி செய்த ஓர் அரசர், அவர் வழிபட்ட கணபதி துண்டி விநாயகர் என்று சிலரும், துண்டி விநாயகரே காசியில் ஆட்சி செய்தார் என்று வேறு சிலரும் கூறுகின்றனர். தருமபுரம் மகா சந்நிதானம் சிவஞான தேசிகர் துண்டி விநாயகர் தோத்திரப்பா, பாடியுள்ளார். இதில் ஒரு பா வருமாறு :

சீர்கொண்ட காசிநகர்
சேர் துண்டி ராசனெனும்
பேர்கொண்ட வைங்கரற்குப்
பேசுபுகழ்த் — தார்கொண்ட
நற்றிருப்பாட் டிரைத்து
ஞாலமிசைத் தொண்ட ரெலாம்
கற்றிருப்பார்
மேலாங்கதி.

30-1

உ

சிவமயம்

காசி விசுவேசர் துணை

# முன்னுரை...

**மாவாழு மேழு வழிநகரத்தார்க்கென்றும்**
**கோவாழுஞ் செல்வக் குலதெய்வ—மாவாழ்**
**மரகதவி நாயகனே மாமலர் தூய் வாழ்த்த**
**வரநலவாழ் வெல்லாம் வரும்.**

*— நகரத்தார் சரித்திரம்*

மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் பெருமைகளை முழுமையாகப் பெற்ற தலம் காசி. அங்கே கோவில் கொண்டுள்ள விசுவநாதருக்கு நாள்தோறும் திருவனந்தல், உச்சிக்காலம், அர்த்த ஜாமப் பூசைகளைச் செய்யும் பேறு, நகரத்தார்களாகிய எங்களுக்குக் கிடைத்திருக்கிறது. இவ்வாறே விசாலாட்சி அம்மனுக்குக் காசியில் கற்கோவில் கண்ட பெருமையும் எங்களைச் சேரும்.

இக்கோவில்களில் காசி நகரச்சத்திரச் செயற்குழுவினரால் அலுவலர்கள், ஊழியர்கள் வாயிலாக, எக்குறையுமின்றி பூசைகளைச் செய்தும் ஏராளமான அறக்கட்டளைகளை நிறைவேற்றியும் வரப் பெறுகின்றன.

முன் கும்பாபிஷேகம் நடந்து 63 ஆண்டுகட்குப் பின்னர், விசாலாட்சி கோவிலில் குட முழுக்குவிழா இப்போது நிகழ்கிறது. இவ்விழாவின்போது, விசாலாட்சி அம்மனின் புதிய திருவுருவம் பிரதிஷ்டை செய்யப்பெறுகிறது. இப்பெரும் செயல்களில் எங்களை ஈடுபடுத்திய இறைவனின் கருணையை எண்ணி வணங்கி மேன்மேலும் இறையருளை வேண்டுகிறோம். இந்தத் தெய்வப் பணிகளுக்கு நன்கொடை வழங்கியுள்ள சிவநேயச் செல்வர்க்கு அன்னை விசாலாட்சியும் விசுவேசரும் அருள் சுரப்பாராக.

எங்கள் முயற்சிகளுக்குப் பலவகையில் உறுதுணையாக இருந்துவரும் பெருமக்கள் அனைவருக்கும் அன்னையருள் என்றும் நின்று நிலவுவதாக.

இத் திருத்தொண்டில் ஈடுபட்ட எங்கள் துணைத்தலைவர்கள் செயலாளர், துணைச் செயலாளர்கள், பொருளாளர், செயற்குழு உறுப்பினர்கள் ஆகியோரும், திரு. வினைதீர்த்தான் செட்டியார் அவர்கள் தலைமையில் காசியிலும் கிளைச்சத்திரங்களிலும் அன்றாட அலுவல்களைப் பொறுப்புடன் கவனித்து வரும் ஊழியர்களும் எல்லா நலங்களும் வளங்களும் பெற்று நீடு வாழ்க.

குட முழுக்கு மலர் ஒன்றை வெளியிடலாம் என்று சில நாட்களுக்கு முன்னரே நினைத்தோம். அதை நிறைவேற்ற திரு. 'சோமலெ' - முன் வந்தார். இவர்கள் பத்தாண்டுகளாகச் காசிச் சத்திரத்துடன் நெருங்கிய தொடர்பு உடையவர்கள். இவர்களுக்கும் வெளியீட்டு வகையில் ஒத்துழைத்த ஏனையோர்க் கும் அன்னையருள் என்றும் விளைவதாக.

நிதி அளித்தோர்க்கும் உடல் உழைப்புத் தந்தோர்க்கும் அறிவு தானம் செய்தோர்க்கும் நன்றி.

தை 14-ஆம் நாளில் நாசிக் பஞ்சவடியில் தண்டாயுதபாணி கோவில் குடமுழுக்கு விழாவும் இவ்வாறே இனிது நிறைவேற வும், கயா நகரச் சத்திரத்தில் காலத்தால் ஏற்பட்ட பழுதுகளைப் பார்த்துப் புதுப்பிக்கும் வேலை செம்மையாக நடைபெறவும் அப்பணிகட்கும் நகரத்தார் பெருமக்கள் உதவவும் அன்னை விசாலாட்சி அருள் பாலிப்பாராக.

| | |
|---|---|
| நகரச்சத்திரம்<br>காசி<br>18—10—71 | **அள. அரு. சோமநாதன் செட்டியார்**<br>தலைவர்<br>ஸ்ரீ காசி நகரச் சத்திரச் செயற்குழு |



காசி விசாலாட்சி கோயில் கோபுரம்

உ

சிவமயம்

காசிவிசுவேசர் துணை

# பதிப்புரை

புயலார் பொழிற்காசிப் பூங்கோயில் மேய
கயலார் தடங்கணாள் காந்தன் — செயலாவி
உய்யத் துதியார் உதிப்பார் ; துதிப்பாரேல்
வையத்(து) உதியார் மறுத்து.

— குமர குருபர சுவாமிகள்
(காசிக்கலம்பகம் : 6)

ஆண்டவனை வழிபடுவதே அங்கம் பெற்ற பயன் என்பார் திருநாவுக்கரசர். அவ்வாறு வழிபடுவதற்கு அமைந்தவை கோயில்கள்.

தமிழ்நாடு புண்ணியத் தலங்கள் நிறைந்தது. அவற்றில் தென்னாடுடைய சிவனுக்குரிய திருத்தலங்கள் வானளாவ ஓங்கிய கோபுரமும் கலைநலம் செறிந்து கவினுற்று விளங்கும் கோவிலும் கொண்டவாய்ச் சைவநெறி தழைக்க விளங்குவன. சைவ மணம் கமழும் அத் தலங்கள் யாவும் தனிப் பெருமையுடையன. எனினும் அவற்றுட் சில தென்னாட்டுக்காசி (தெட்சிணக்காசி) எனப்படுகின்றன.

இவ்வாறு தமிழ்நாட்டுத் தலங்களைத் தன்னோடு ஒப்பிட்டுக் கூறுமளவு உயர்வுற்று மிளிர்வதிலிருந்தே காசியம்பதியின் பெருமையை உணரலாம். மேலும் தமிழ் மக்கள் காசிக்குச் சென்று வருவதைத் தம் வாழ்க்கைப் பேறாகக் கொண்டிருப்பதிலிருந்தும் தமிழ் மக்களுக்குச் காசியின் பாலுள்ள ஈடுபாடு புலனாகும்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்று சிறப்புக்களையும் உடையது காசி.

## மூர்த்தி

காசியிலுள்ள சிறப்பான மூர்த்திகள் விசுவநாதர், அன்னபூரணி, விசாலாட்சி, துண்டி விநாயகர். இந்த மூர்த்திகளை நகரத்தார் வழிபட்டு வருகின்றனர்.

காசிவிசுவநாதர் ஒரு லிங்கத் தோற்றம். நருமதை ஆற்றங் கரையில் சில இடங்களில் கிடைக்கும் குழைவான மெருகேறிய கற்களே இந்த லிங்கத்துக்கு அமைந்த பாணம். இக் கற்கள் பெரும் பாலும் வெண்மை நிறமாக அமையும். லிங்கத்தின் பிற பகுதிகள்

(ஆவுடையார் போன்றவை) எல்லா லிங்கங்களுக்கும் அமைந்தது போலவே அமையும்.

தேவார திருவாசகங்களிலும் திருவருட்பாவிலும், நம் வினை நீக்கத்துக்கு நாமே பூவும் நீரும் கொண்டு வழிபடவேண்டுமென்று சொல்லப்பெற்றிருக்கிறது. இந்த நிலையை காசியில் விசுவநாதர் கோயிலில் காண்கிறோம். பூசை நிகழா நேரங்களில் யாரும் விசுவநாதப் பெருமானை முழுக்காட்டலாம். அதற்குப் பண்டாக்கள் தடையாக இருப்பதில்லை.

விசுவநாதருக்கு நூற்றியெழுபது ஆண்டுகளாக முக்காலமும் நகரத்தார்கள் தங்கள் செலவில் பூசை செய்து வருகின்றனர். அந்தப் பூசைகளுக்குரிய எல்லாப் பொருள்களும் நகரச் சத்திரத்திலிருந்து நாள்தோறும் இருமுறை உரிய இசைக் கருவிகள் முழங்க, விசுவநாதர் கோவிலுக்கு எடுத்துச் செல்லப் பெறுகின்றன. இந்த நிகழ்ச்சிக்கு, சம்போ என்று பெயர். சம்போ இந்த நூற்றியெழுபது ஆண்டுக்காலமும் ஒருநாள்கூட விடுபடாமல் அனுப்பப் பெற்றிருக்கின்றது. மழைக்காலத்தில் வெள்ளப் பெருக்கு ஏற்படின் பழைய விசுவநாதர் கோவிலை (மசூதி உள்ள இடத்தை)ச் சுற்றி ஞான வாவி வழியாகப் படகுகளில் சம்போ அனுப்பப் பெறுகிறது. காசிமாநகர் கலக மாநகராய்க் கோலம் கொள்ளும் போதும் சம்போ தடைப்படுவதில்லை. 1942-ல் வெள்ளையனே வெளியேபோ என்ற இயக்கம் வலுவடைந்து காசியில் 144 தடை ஆணை பிறப்பிக்கப் பெற்றிருந்தது. அந்த நிலையிலும் அரசினர் நகரத்தார் அனுப்பும் சம்போவிற்கு 144 தடையினின்றும் விதிவிலக்கு வழங்கியிருந்தனர். விசுவநாதர் கோவிலில் மேளம் வாசிக்கவும் தேவாரம் முழங்கவும் நகரத்தார் ஏற்பாடு செய்துள்ளனர். அங்குள்ள மடைப்பள்ளி, நகரத்தார் கட்டியதே.



நகரத்தார் செலவில் நிகழும் படா பூஜா என்ற சாயரட்சையில் ஏழு பண்டாக்கள் சேர்ந்து வேதம் ஓதி, கலையழகுடன் பூசை செய்விப்பதும் சாமரம் முதலியன வீசுவதும் காணற்கினிய அரிய காட்சியாகும்.

தமிழினம் தொல்காப்பியக் காலந்தொட்டு இன்றளவும் 'சக்தி' வழிபாட்டில் மிகவும் ஈடுபாடு காட்டி வந்திருக்கிறது. அன்னை

### 64க்கு 5 பழுதில்லை

காசியிலுள்ள தீர்த்தக் கட்டங்கள் 64. கங்கைப் பேராற்றிலுள்ள இந்த 64 துறைகளிலும் நீராடுவது எல்லோராலும் இயலாது. ஆதலால், கீழே குறிப்பிட்டுள்ள ஐந்து தீர்த்தக் கட்டங்களிலாவது முழுகுவது நன்று.

1. வருணை சங்கம கட்டம்
2. அசி சங்கம கட்டம்
3. தசாசுவமேத கட்டம்
4. பஞ்ச கங்கா கட்டம்
5. மணிகர்ணிகா கட்டம்

ஓடத்தில் சென்று, இந்தப் பஞ்ச தீர்த்த யாத்திரையைச் செய்யலாம்.

மணிகர்ணிகா கட்டத்தில் உடலைத் தகனம் செய்து எலும்புகளைப் போடுவது மிகப் புனிதமாகக் கருதப் படுகிறது.

அன்னபூரணி பழந்தமிழ் நூலாகிய மணிமேகலையில் குறிக்கப்பெறுகிறது. காசித்தலத்தில் அன்னபூரணி கோவிலில் உச்சிக்காலப் பூசையை நகரத்தாரே நாள்தோறும் செய்துவருகின்றனர்.

காசி நகரத்து இறைவியை, தமிழர்கள் தொன்றுதொட்டு விசாலாட்சியாகவே கருதி வழிபட்டு வருகின்றனர். காசிக்கலம்பகம் முதலிய பல இலக்கியங்கள் இவ்விறைவியைப் போற்றுகின்றன. விசாலாட்சி அம்மனைப் பற்றிப் பதினெட்டாம் நூற்றூண்டினரான தருமபுரம் மகா சந்நிதானம் சிவஞான தேசிகர் அவர்கள் பல பதிகங்கள் பாடியுள்ளார்கள். இவை ''தருமபுரம் பண்டார சாத்திரங்கள்'' என்ற தொகுப்பில் உள்ளன.

காசி விசாலாட்சி அம்மன் கோவில் பிற்காலத்தில் ஏற்பட்டதே. அம்பிகைக்குத் தனிக் கோவில் கட்டும் வழக்கம் பழங்காலத்தில் இல்லையென்று இதற்கு விளக்கம் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவோர், காஞ்சிபுரத்துத் திருக்கோவில்களில் சிவலிங்கம் மாத்திரம் இருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றனர். ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற கொள்கையில் ஊறிய பழந்தமிழ் மக்கள் சிவபெருமானை மட்டுமே வழிபட்டனர் போலும். இறைவன் தாயுமானுர் என்பதற்குச் சான்ருகத் திருச்சியில் தாயுமானவர் கோவில் இருக்கிறது.

இறைவன் கோவிலுடன் இறைவிக்கும் கோவில் அமைக்கும் பிற் கால மரபுக்கு ஏற்ப, கல்கத்தா நகரத்தார்கள் 1890 ஆம் ஆண்டளவில் சிறு அளவினதாகிய விசாலாட்சி கோவில் அருகே காசி மகாராஜா அவர்களிடம் அன்பளிப்பாக இடம் பெற்று, இரு இடங்களையும் இணைத்து விசாலாட்சி கோவிலைப் புதுக்கியும் பெருக்கியும் கருங் கல்லில் கட்ட முன்வந்தனர். இத்திருப்பணி 1893-ல் ஒரு லட்சம் ரூபாய்ச் செலவில் இனிது நிறைவேறியது. மூலவரின் இடம் சிறிது மாற்றம் அடைந்ததாகவும் ஒரு நூல் கூறுகிறது. விசாலாட்சி கோவிலின் உரிமையாளராக இருந்த பண்டாக்களிடம், அக்கோவிலில் பூசை முதலியவற்றை நடத்தும் சுதந்தரங்களையும் நகரத்தார் பெற்றனர். 1908-ல் (பிலவ ஆண்டு தைத் திங்கள் 2ம் நாள்) விசாலாட்சி அம்மைக்கு தங்கத்தில் விக்கிரமும் வெள்ளித் திருவாசி யும் செய்து வைத்துக் குடமுழுக்கும் நடத்தியிருக்கிறார்கள்.

தண்டி விநாயகருக்கு நகரத்தார் நாள்தோறும் சூட தீபாராதனை செய்து வருகின்றனர்.

இந்த மூர்த்திகளிடம் தமிழ் மக்களுக்கு நீங்காத பற்று உண்டு. தமிழ்நாடெங்கும் பல சிவன் கோவில்களில் விசுவநாதர்க்கும் விசாலாட்சிக்கும் அமைத்துள்ள உட்கோவில்களும் காசிவிசாலாட்சி — காஞ்சி காமாட்சி — மதுரை மீனாட்சி என்ற சொல்வழக்கும் இதற்குச் சான்று.

சோழர் குலப் பேரரசியாகிய செம்பியன் மாதேவியின் பெயரால் விளங்கும் செம்பியன் மாதேவி கோயிலில் காசியிலிருந்து கொண்டு வரப்பெற்ற சிவலிங்கம் தனிச்சிறப்புடன் விளங்குகிறது. காசியி லிருந்து கொணர்ந்த லிங்கங்களை அமைத்துக் கட்டப்பெற்ற ஏராள மான கோயில்களைத் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் காணலாம்.

## தலம்

சிவத்தலங்களிலெல்லாம் இணையற்றது காசி. முத்தி தரும் தலமாகவும் இது கருதப்பெறுகிறது. அருளாளர்கள் காசியை இந்தியாவின் சமயத் தலைநகராகக் கருதுவர். என்றென்றும் இந்தியப் பெருநாடு முழுமைக்கும் அருள் உணர்வை ஊட்டவல்ல தலம் காசி யொன்றேயாகும். காசியையும் இராமேசுவரத்தையும் இணைத்துக் காசிராமேசுவரம் என ஒரே சொல்லாகக் கூறும் பழக்கம் தமிழ் நாட்டில் நிலவி வருகிறது. தென்காசி, சிவகாசியெனக் காசியை நினைவூட்டும் தலங்களும் தமிழ்நாட்டிலுள.

## தீர்த்தம்

'கங்கையிற் சிறந்த நதியுமில்லை காசியிற் சிறந்த பதியுமில்லை' என்பது ஆன்றோர் வாக்கு. தேவார நாயன்மார்கள் அனைவரும் கங்கையைக் குறித்துப் பாடியிருக்கின்றனர். புண்ணியத் தன்மைக்கும் புனிதத் தன்மைக்கும் பெயர்பெற்ற காவிரிக்கு ஒப்பாகும் பேராறாக, தமிழிலக் கியங்கள் கங்கையையே குறிக்கின்றன. கண்ணகிக்குச் சிலையெடுத்த செங்குட்டுவன் தன் தாயையும் அழைத்துக்கொண்டு கங்கையில் நீராடினான். ''இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே'' என்று கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் பாடியுள்ளார்.

கங்கை என்னும் பெயர் இந்தியாவுக்கு அப்பாலும் புகழ்பெற்றுப் பரவியிருக்கிறது. மேக் கோங் என்ற ஆறு திபேத்தில் தோன்றிச் சீன வழியாக, தாய்லந்து - இந்தோச்சீன நாடுகளின் எல்லையாக அமைந்து பாய்ந்து பிறகு கம்போடியாவின் தலைநகரான புனம்பென் நகர் அருகே மூன்று ஆறுகளுடன் கூடிப் பின்னர் கடலில் கலக்கிறது. சயாம் (தாய்) கம்போடிய மொழிகளில் மே - தாய்; காங் - கங்கை. மேகாங் – கங்கைத் தாய் என்ற பொருளில் இச்சொற்றொடர் வழங்கு கிறது. இது, மெக்கொங் என்று நாளடைவில் திரிபுபெற்றது.

வருணை, அசி என்ற இரு சிற்றாறுகளுக்கிடையில் கங்கைக் கரை யிலமைந்துள்ள காரணத்தால் காசியம்பதிக்கு வாரணாசி என்ற பெயர் வந்தது. கலித்தொகை, பெருந்தொகை போன்ற நூல்களிலும் வாரணாசி என்ற பெயர் விளங்கக் காண்கிறோம்.

கெடில ஆறு, கடலூருக்கு அண்மையிலுள்ள திருவகீந்திரபுரத் திற்கு அருகே, கங்கை காசியில் திக்குமாறிப் பாய்வது போலவே ஓடு வதால் அங்கு கெடில ஆற்றைக் கங்கை என்று சமயச் சான்றோர் கூறுவர்.

## நகரச் சத்திரம்

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முப் பெருமையுமுடைய காசி யில் கல்கத்தாவில் வாணிகம் செய்த நாட்டுக் கோட்டை நகரத்தார் மனமுவந்து மேற்கொண்ட அறப்பணிகளைச் செம்மையாகச் செய்வ தற்காக 1860 அளவில் ஹிந்துஸ்தானி கோசாயி சாதுக்கள் மடத்தை விலைக்கு வாங்கி அதைப் புதுப்பித்துக் கண்டார் வியக்கும் பெரு மாளிகையான நகரச் சத்திரத்தைக் கல்லினால் கட்டினார்கள். நந்த வனம், பசுமடம் முதலியவற்றையும் மிக விரிவாக அமைத்தனர். அறக்கட்டளைகள் செவ்வனம் நடை பெறுவதற்கேற்ப ஏனைய ஏற் பாடனைத்தையும் செய்தனர்.

கல்கத்தா நகரத்தார்க்காகக் காசிச் சத்திரத்தை மேற்பார்வை செய்துவந்த தேவகோட்டை அரு. அரு. சோம. குடும்பத்திற்குக் கல்கத்தாவில் பெரிய தொழில் இருந்தது. அந்தக் கடையின் ஏஜெண்டு (தேவகோட்டை) சாமிநாதன் செட்டியார் அவர்கள் தங்கள் முதலாளி பெயருக்குக் கல்கத்தா எஸ்ரா தெரு 34–ம் இலக்கம் உள்ள மாடமாளிகையை விலைக்கு வாங்கி இதைக் காசி நகரச் சத்திரத்துக்கு உரிமை ஆக்கினார்கள். இந்தச் சொத்திலிருந்து கிடைக்கும் வாடகை வருவாயே இன்றளவும் காசி நகரச் சத்திரத்தின் உயிர்நாடியாக இருந்து வருகிறது.

1925ஆம் ஆண்டு முதல் இந்த அறங்களை நிலைநிறுத்தும் பொறுப்பைச் பர்மா நகரத்தார் அன்புடன் ஏற்றனர். ஆண்டு தோறும் இரங்கூனிலும் நாட்டு புறத்திலுமுள்ள கடைகள் தைப் பூசத்தன்று காசி நகரச் சத்திரத்திற்கு மகமை எழுதி, காசியில் நகரத்தார் செய்துவரும் அறங்கள் மிகவும் பெருக உதவினர்.

1932ஆம் ஆண்டு அளவில் விசுவேசர் கோவிலை நடத்தும் மஹந்து பண்டாக்கள் ஆகியோருக்குள் பாழ்குழுவும் பல்செய்யும் உட்குழுக் களும் உண்டாயின. அவர்களுக்குள் வழக்கு நடைபெற்றது. அப்

போது, உத்தரப்பிரதேச உயர்நீதிமன்றம், காசி விசுவேசர் கோவிலை நடத்த, காசி நகரச் சத்திர ஏஜெண்டையே ரிசீவராக நியமித்தது. ஆறு ஆண்டுகள் கழித்து, பண்டாக்கள் மஹந்து ஆகியோருக்குள் சமரசம் ஏற்பட்டது.

பர்மாவுக்கும் இந்தியாவுக்கும் 1942-இல் போக்குவரத்தும் தொடர்பும் அறுந்தன. அப்போது அறச்செயல்கள் நடத்தும் பொறுப்பை இந்தியாவிலிருந்த நகரத்தார் இனிது நிறைவேற்றினர். தேவகோட்டை அழ.சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியார் (தலைவர்), காரைக்குடி மெ. செ. ச. சிதம்பரம் செட்டியார் (காரியதரிசி), கானாடுகாத்தான் மு. சித. மு. சிதம்பரம் செட்டியார் (பொக்கிஷதார்) ஆகிய மூவருமே அந்நாளில் செயற்குழுவாக இயங்கினர்.

1953 முதல் இரங்கூனில் ஆட்சிக்குழு மீண்டும் செயல் புரிந்தது. அவர்கள் அனுப்பிய தூதுவர்களை மலேயா நகரத்தார்கள் மனமுவந்து வரவேற்று அந்த ஆண்டில் பெருந்தொகை நன்கொடையாக வழங்கினர். மலேயாவாழ் நகரத்தார் அனைவரும் காசி நகரச் சத்திரத்திற்கு ஒல்லும் வகையாலெல்லாம் இன்றளவும் உதவிவருவது பாராட்டுக்குரியது.

1963—இல் வெளியிடப் பெற்ற நூற்றாண்டு மலரில் இரங்கூனிலிருந்த ஆட்சிக் குழுவினர், காசிநகரச் சத்திரத்தின் வரலாற்றை

### பண்டா

பக்தர்கள் இறைவனைவழிபட அவர்களைக் கோவிலுக்கு அழைத்துச் சென்று கோவிலை அறிமுகப் படுத்தும் தரகராக காசியிலும், வட இந்தியாவில் உள்ள ஏனைய தலங்களிலும் பண்டாக்கள் பெருங்கூட்டமாக உள்ளனர். இவர்களுக்கு, கோவில்களில் எவ்வித உரிமையோ, தொடர்போ, கடமையோ கிடையாது. நாம் இறைவனை வணங்குவதற்கு, இவர்கள் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கிறார்கள். இதற்குக் கட்டணம் நம்முடைய பண இருப்பையும், அவர்களுடைய திறமையையும் பொறுத்தது.

கோவிலில் அவ்வக் காலங்களில் முறையான பூசைகளைச் செய்வதற்குத் தனியே காசி பிராமணர்கள் உள்ளனர். இவர்கள் ஆசாரத்தை அனுஷ்டிப்பவர்கள். பேச்சு வழக்கில் இவர்களும் பண்டா என்றே குறிப்பிடப்படுகின்றனர்.

தில்லை நடராசர் கோவில் தீட்சிதர்களின் உரிமையாக இருந்து வருவதுபோல, காசி விசுவநாதர் கோயில் மகந்துகளுக்கு உரிமையாக இருந்து வருகிறது.

விரிவாகத் தெரிவித்திருக்கின்றனர். இம்மலர், கிரவுன் அளவில் 312 பக்கங்களில் தமிழ், ஹிந்தி, ஆங்கிலக் கட்டுரைகளும் ஏராளமான வண்ணப்படங்களும் கொண்டது. வடஇந்தியப் பல்கலைக்கழகங்களில் டாக்டர் பட்டம் பெறச்சமயத்துறையில் ஆராய்பவர்கட்கு இம் மலர் பயன்பட்டு வருவது நமக்கு மகிழ்ச்சி தருகிறது.

நூற்றாண்டு விழாவைத் தொடர்ந்து, கம்பை தனவைசியர் கல்விக் கழகத்தார் பர்மியக் கியா ஒரு லட்சத்து ஒன்று காசிநகரச் சத்திரத்துக்கு வழங்கினர்.

பர்மாவைவிட்டு நகரத்தார் வெளியேறிவிட்டமையால் 1964-இல் இந்தியாவிலேயே ஓர் இடைக்காலக்குழு நியமிக்கப்பெற்றது. இக் குழுவினர் உத்தரப்பிரதேச மாநிலச் சட்டங்களின்படி, லக்னோவில் சங்கங்களின் பதிவாளர் முன்னிலையில் 31—3—1965-இல் ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சத்திரம் டெம்ப்பிள்ஸ் மானேஜிங் சொஸைட்டி என்ற நிறுவனத்தைப் பதிந்திருக்கின்றனர். இக் குழுவினர் 1967-இல் மதுரையில் ஒன்றரை இலட்சம்ரூபாய்க்கு ஒரு கட்டிடம் வாங்கி அதைப் புதுப்பித்தனர்.

9—2—1970-இல் கோவிலூரில் 96 ஊர் நகரத்தார் கூடி மூன்றாடுகளுக்கு ஒரு செயற்குழுவைத் தேர்ந்தெடுத்தனர். அக்குழுவின் தலைவராக தேவகோட்டை ஜமீன்தார் உயர்திரு. அள. அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். இவர்கள் முன்னோர் இருபது லட்சம் செலவில் இராமேசுவரத்திலும், பன்னிரண்டு இலட்சம் செலவில் காளையார் கோவில், உப்பூர் முதலிய தலங்களிலும் திருப்பணிகள் செய் துள்ளனர்.

சோமநாதன் செட்டியார் அவர்கள் இராமேசுவரம் இராமநாத சாமி கோவிலின் பரம்பரை டிரஸ்டி என்ற முறையில் காசி-இராமேசு வரம் தொடர்பின் அடையாளமாக விளங்குகிறார்கள். ஆண்டுதோறும் தீபாவளிக்கும் பிற நாட்களிலும் காசிக்குப் போய் வருவதால் முப்பது ஆண்டுகளாகக் காசிநகரச் சத்திரத்தின் நடைமுறைகளை இவர்கள் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறார்கள். பொது வாழ்க்கையில் ஈடு பட்டு மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருப்பதால், எத்தகையவர் களுடனும் எளிதில் பழகும் இயல்பும் இவர்களிடம் இருக்கிறது. காசி, இராமேசுவரம் தொடர்பான செயல்களிலேயே இவர்கள் அல்லும் பகலும்சோம்பல் என்பதே சிறிதுமின்றி ஈடுபட்டிருக்கிறார்கள்.

---

காசியிலுள்ள சிவன் கோவில்களின் எண்ணிக்கை 1500.

பிள்ளையார் கோவில்கள் 150. இவை சோட்டா கணபதிகள்; கேதார கட்டத்தில் சிந்தாமணி விநாயகரும் டவுன் ஹால் அருகே படா கணபதியும் கோயில் கொண்டுள்ளனர்.

---

லக்னேவில் 31—3—65-இல் பதிவான விதிமுறைகளில் சில திருத் தங்கள் கோவிலூர்க் கூட்டத்தில் செய்யப்பெற்றன. இந்த மாற்றங் களுக்கு ஏற்ப, காசி நகரச் சத்திரத்தின் ஆட்சி நடைபெற்று வரு கிறது. காரைக்குடி மேலமடத்தில் தலைமை அலுவலகம் ஏற்படுத்தி அங்கே கூடும் செயற்குழுவின் ஆட்சியில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகளைப் பற்றி ஒரு கட்டுரை, நெற்குப்பை இளையாற்றக்குடி-கழனிவாசல்குடி நகரத்தார் வெளியிட்ட வைகாசி விசாகப் பொன்விழா மலரில் 7—6—1971-இல் வெளி வந்தது. அக்கட்டுரை தனியாகவும் அச்சிட்டு வழங்கப் பெற்றிருக்கிறது.

மேற்குறித்த வெளியீட்டிற்குப் பிறகு காசிநகரச் சத்திர வர லாற்றில் முக்கிய நிகழ்ச்சி விசாலாட்சி கோவில் குடமுழுக்கு நடை பெறுவதாகும். இதைத் தொடர்ந்து மகாராஷ்டிர மாநிலத்தில் கோதாவரிக்கரையில் நாசிக் பஞ்சவடியில் கார்த்திக் சுவாமி மந்திர் என வழங்கும் தண்டாயுதபாணி கோவிலில் சீர்திருத்தங்கள் செய்தும் ராஜகோபுரம் கட்டியும் குடமுழுக்கைச் செய்விக்க ஏற்பாடாகி வரு கிறது. அதன் பின்னர் பீஹார் மாநிலத்தில் உள்ள கயா என்னும் தலத்தில் நகரத்தார் ஏறத்தாழ 90 ஆண்டுகளுக்குமுன் மிக விரிவாக அமைத்திருக்கும் சத்திரக் கட்டடத்தைப் பழுதுபார்த்து, புதுப்பிக்கத் திட்டமிடப் பெற்றிருக்கிறது. இம்முப்பெரும் முயற்சிகளில் முதல் முயற்சியான விசாலாட்சி கோவில் குடமுழுக்கை ஒட்டியதே இம் மலர்.

## விசாலாட்சி கோவில் குடமுழுக்கு

விரோதிகிருது ஆண்டு ஐப்பசித் திங்கள் 15ஆம் நாள் (1—11—1971) திங்கட்கிழமை இக்குடமுழுக்கு விழா நடைபெறுகிறது. சென்ற குடமுழுக்கு 1908-இல் நடைபெற்றது. 63 ஆண்டுக்கால இடைவெளிக்குப் பின்னர் நடைபெறுகிறது என்ற வகையில் இப் பெருவிழா குறிப்பிடத் தக்கதாகும்.

காஞ்சி காமகோடிப் பெரியவர்கள், சிருங்கேரி சங்கராச்சாரியார் சுவாமிகள், திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர், சமய ஒழுக்கமும் மரபும் உணர்ந்த ஏனைய பெரியவர்கள் ஆகிய பலரையும் கலந்து கொண்டு கால இயல்பால் பின்னமுற்ற விசாலாட்சி அம்மையின் திருவுருவத்தை முறைப்படி புதிதாக அமைத்து நிறுவுதல் இக்குட முழுக்கு விழாவில் குறிப்பிடத் தக்க பணியாக அமைந்துள்ளது. காசி விசாலாட்சியின் உருவ இலக்கணத்தை காரணுகமம் பின்வருமாறு கூறுகிறது.

''நவயௌவனமுள்ளவளாய்,சிவப்பு நிறமுடையவளாய்,முழுமதி போன்ற முகமுடையவளாய்; முக்கண் உடையவளாய், உயர்ந்த மார்புடையவளாய், இடது கையில் பத்மராகம் இழைத்த பாத்தி ரத்தை ஏந்தியவளாய், வலது கையில் பத்மராகம் இழைத்த அகப்பையை ஏந்தியவளாய், நின்ற திருக்கோலம் உடையவளாய் இருப்பாள்.''

இக்குறிப்புகளையெல்லாம் மனத்திற்கொண்டு விசாலாட்சி கோவிற் பணி நிறைவேற்றப் பெற்றிருக்கிறது. திருப்பணி வேலைக்குச்

சிற்பிகள் ஊழியர்கள் ஆகியோரும், குடமுழுக்கு விழாவிற்கு குருக்கள், அர்ச்சகர், சிவாச்சாரியார் ஆகியோரும் தமிழ்நாட்டி லிருந்து அனுப்பப் பெற்றிருக்கின்றனர். தமிழ்நாட்டு முறைப்படி குடமுழுக்கு நடத்துவதும் ஆகம வழிப்படி யாகசாலை அமைப்பதும் காசியில் எளிதன்று. இக்குடமுழுக்கு, தமிழ்நாட்டில் நடைபெறுவது போலவே அங்கும் நடைபெற ஏற்பாடு செய்யப் பெற்றிருப்பது கூர்ந்து நோக்கத் தக்கது.

விசாலாட்சி அம்மனின் திருவுருவம் பொள்ளாச்சியில் புதிதாக அமைக்கப் பெற்றிருக்கிறது, இதற்குரிய செலவை ஏற்பதுடன் திருவுருவத்தைக் காசியில் கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பையும் நிறைவேற்றியிருக்கும் திருவாளர் ப. ராம. செ. ராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் பொள்ளாச்சியிலும் தேவ கோட்டையை அடுத்த கோட்டூரிலும் கோவில்களைப் புதுப்பித்து குடமுழுக்குச் செய்துள்ளார்கள். புதிய திருவுருவத்தின் படமே இம்மலர் அட்டை யில் பொலிவுடன் காட்சி தருகிறது.

இவ்விறையுருவத்துக்கு வெள்ளி அங்கி காரைக்குடி சி. ப. சித. உமையாள் ஆச்சி அவர்கள் நன்கொடையில் செய்யப் பெற்றிருக் கிறது. இவர்கள் விசுவேசருக்கு நாகாபரணக் குவளையையும் வெள்ளியில் செய்து தந்திருக்கிறார்கள்.

**சிவபிரான் சிரசில், சடைசூடும் சிறப்புடையது**

**கங்கை (ஆறு)**

| | |
|---|---|
| *அப்பர் சடை* | 8—11 |
| *அம்பு அணி கொண்டவன்* | 42—3 |
| *ஒருங்கு திரை உலவு சடை* | 38—1 |
| *கங்கு நீர்தங்கு செஞ்சடையான்* | 29—9 |
| *சடையிடைக் கங்கை தரித்தோய் போற்றி* | 4—146 |
| *சடையுளே கங்கை வைத்த சங்கரா* | 5—64 |
| *சிறை நீர்* | 6—47 |
| *நதிசேர் செஞ்சடை* | 4—109 |
| *நெடு நீர்* | 6—42 |
| *பொங்கு கங்கை சடைச் செறுப்பவனே* | 24—2 |
| *மந்தாகினி நுந்தும் பந்தப் பெருமை தழிச் சிறைநீர்* | 6—47 |
| *வியன் கங்கை பொங்கி வரு நீர்* | 6—26 |
| *வெள்ளந்தாழ் விரிசடையன்* | 5—21 |

—தொகுப்பு : தணிகைமணி

டாக்டர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை

(திருவாசக ஒளி நெறி)

## கால பைரவரும் காசிக் கயிறும்

காசியில் வைரவர், அங்குள்ள ஒலி முறைக்கேற்ப, பைரவர் என்றே குறிப்பிடப்படுகிருர். அவருடைய முழுப் பெயர் காலபைரவர் என்ப தாகும்.

காலம் — முடிவு. காலன் — ஆயுளைக் கணிப்பவன். காலம் முடிந்தவுடன், அவரவர் வினைக் கேற்றபடி, முடிவையும் பலனையும் அருளுபவர் காலபைரவர்.

''விசுவேசர் கஞ்ச்'' என்னும் பகுதியில் காலபைரவர் கோவில் இருக்கிறது. இதனைப் ''பைரவநாத் மந்திர்'' என்றும் குறிப்பிடுவார்கள். இக் கோவிலில் கால பைரவரின் முகம் மட்டும் தெரியும் வண்ணம் உடலைக் கருப்புத் துணியால் மூடி வைத்திருப்பார்கள். பணம் செலுத் திஞல் ''விசுவரூபதரிசனம்'' என்ற பெயரில், கருப்புத் துணியை விலக்கிக் காட்டுவார்கள். பணம் செலுத்தாதவர்கள் பைரவரின் முகம் மட்டும் தெரியும்படியமைந்த திரையையே காணுகின்றனர். பைரவ ரின் உருவம் ரேகையாக அமைந்திருக்கிறது.



காலபைரவர்

பைரவருக்கு உகந்த நிறம் கருப்பு என்பது பொதுவான கருத்து. காசியில் உள்ள ஏனைய பைரவர் கோவில்களிலும் கருநிறத் துணியே ஆடையாகப் பயன்படுத்தப்படுகிறது. நவக்கிரகங்களுள் ஒன்முன சனீசுவரனுக்கு ஞானேபதேசம் செய்தவர் பைரவர் என்று கருதப்படுகிறது. சனிக்கும் நிறம் கருப்பு என்றே நூல்கள் குறிக்கின்றன.

தமது குருநாதருக்கு உகந்த நிறமாகிய கருப்பையே இவரும் விரும்பி ஏற்றிருக்கக் கூடும்.

காலபைரவரின் பிரசாதமாக, கருப்புக் கயிற்றைக் கோவில் ''பண்டாக்கள்'' பக்தர்கள் கையில் கட்டுவார்கள் காலபைரவரின் அருளைக் குறிப்பதாக இதனைக் கொள்ளலாம். மேலும், காசியில் இறப்பவர்களுக்கு எமதண்டனை கிடையாது என்றும், காலபைரவரின் தண்டனையே உண்டு என்றும் நூல்கள் கூறுகின்றன. காசி எல்லைக்குள் வேறேதும் மக்களுக்குத் துன்பம் தாராதவாறு காலபைரவர் காக்கிருர். அவருடைய காப்பு தமக்குண்டென்று காட்டவும் மக்கள் கருப்புக் கயிற்றைக் கையில் அணிகிருர்கள்.

காசிக் கயிற்றை பைரவர் முன்னிலையில் வைத்து அவர் அனுக்கிரகம் பெற்றுப் பிறகு கட்டிக் கொள்ளுவது மரபு.

காசிக் கயிற்றைப் பெரும்பாலும் ஆடவர் வலது கையிலும் பெண்டிர் இடது கையிலும் கட்டிக் கொள் கின்றனர்.

பிற வழிபாட்டுப் பொருள்களும் புதியனவாய் அமைத்துக் காசிக்கு அனுப்பப் பெற்றுள்ளன. குடமுழுக்கு விழாவில் பயன் படுத்த, தங்கமுலாம் பூசிய குடம் புதியதாய்ச் செய்யப் பெற்றிருக் கிறது. இன்னும் ஆலவட்டம், குடை முதலிய சோடனைப் பொருள் களும் வாங்கித் தமிழ் நாட்டிலிருந்து அனுப்பி வைக்கப் பெற்றி ருப்பதும் இக்குடமுழுக்கு விழாவின் சிறப்புக்களாகும்.

விசாலாட்சி கோவிலிலும், கோபுரத்திலும் இன்றியமையாது செய்யவேண்டிய சீர்த்திருத்தங்களைச் செய்தல், புதிய திருவுருவத்தை நிலை நாட்டுதல், குடமுழுக்கு விழா நடத்துதல் ஆகிய செலவுகளைக் காசி நகரச் சத்திரத்து அடிப்படை முதற்பொருளைத் தொடாமலேயே ஈடுகட்டவேண்டுமெனச் செயற்குழு முடிவு செய்தது. ஆர்வத்தோடும் அன்போடும் நன்கொடை தரக்கூடிய நகரத்தார் செல்வர் சிலரை மட்டுமே அணுகுவதென்றும், தனி ஒருவரிடம் ரூ. 500க்குமேல் கேட்பதில்லை என்றும், அந்த ரூ. 500இல் ரூ. 250ஐ விசாலாட்சி கோவில் பணிக்கும், ரூ. 250ஐ நாசிக் பஞ்சவடிப் பணிக்கும் செலவிடு வதென்றும் முடிவுசெய்து அவ்வாறே பொருள் தொகுக்கப்பெற்றது. இவ்வேண்டுகோளுக்கிணங்க, பேரன்புடன் பொருள் வழங்கிய நகரத்தார்களுக்குச் செயற்குழுவின் நன்றி உரியது.

பொருள் வழங்குவதிற்போல நேரில் வந்து விழாவைச் சிறப்பிக்க வும் நகரத்தார்கள் முன்வந்துள்ளனர். தீபாவளிக்குப் பின்னர் சரியாக இரண்டு வாரங்களில் குடமுழுக்கு விழா நிகழ்கிறது. கங்கை யில் நீராடி தீபாவளி கொண்டாடிய புண்ணியத்துடன் குடமுழுக்கு விழாவைப் புனிதக்காசியில் காணும் வாய்ப்பும், விசாலாட்சி அன்னை யின் அருளைப் பெறும் பேறும் பெற நகரத்தார் ஆடவரும் பெண்டிரும் காசியை நோக்கிப் பெருவாரியாக இவ்வாண்டில் சென்றுள்ளனர். இவர்கள் வசதிக்கேற்ப, இருவாரங்கள் காசியம்பதியில் தங்குவதற்கு தனி ரயில்களை விடும்யாத்திரைக் குழுக்கள் தங்கள் பயணத்திட்டங் களை வகுத்துள்ளன. திங்கள், புதன் கிழமைகளில் சென்னை சென்ட்ர லிருந்து லிங்க் எக்ஸ்பிரஸ் ரயிலில் இணைக்கப்படும் நேர் பெட்டியில் பயணம் செய்தால் வண்டி மாறாமலே காசியை அடையும் வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது. குடமுழுக்குக்கு வந்து உடனே திரும்புபவர்க்கு ஆகாயவிமானம் இருக்கிறது. இந்நாளில் சென்னையிலிருந்து பறக்கத் தொடங்கிய ஐந்து மணி நேரத்தில் காசியை அடையலாம்.

குடமுழுக்குக்கு வரும் மக்களை ஒழுங்குபடுத்தவும் அவர்கட்குப் பாதுகாப்புத்தரவும் காவல் துறையினரின் உதவிக்கும் சாரணப் படையின் பணிகளுக்கும் ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கிறது. திரளான மக்களின் தேவை கருதி, காசி நகரச் சத்திரத்தில் தண்ணீர் வசதி இவ்வாண்டில் பெருக்கப்பெற்றிருக்கிறது. தனியே சில விடுச் களும் வாடகைக்கு ஒழுங்கு செய்யப்பெற்றுள்ளன. காசி நகரதி சத்திரத்திலுள்ள நகரேசுவரர் கோவிலில் இலட்ச அருச்சனை நிகழ்ச்சி யும் உண்டு. அண்மையில் நன்கொடையாளர்களால் செய்யப் பெற்ற அறச்செயல்களைக் குறிக்கும் கல்வெட்டுக்களும் திறந்து வைக்கப்பெறும்.

## மலரின் உள்ளே

காசித்தலத்தின் பெருமை — விசாலாட்சி தத்துவம்—சமய உண்மைகள் முதலிய கட்டுரைகள் இம்மலரை அணிவிக்கின்றன. இவற்றை நல்கியுள்ளவர்கள் காசித் தொடர்பும், சமயப் புலமையும் உள்ள ஞானச் செல்வர்களும் புலவர்களும் நாவலர்களும் ஆவர். அளவு சுருக்கமாக இருப்பினும் பொருட் சிறப்பால் இம்மலர் மணமும் பயனும் உடையதாக விளங்குகிறது.

காசியைப் பற்றிய பொதுக்கட்டுரை ஒன்றைப் பலமுறை காசிக்குச் சென்றவர்களும், இந்திய இராணுவத்தில் 'காப்டன்' பதவி வகிப்பவர்களும், நாவல்களும் கட்டுரைகளும் யாத்துவரும் சிறந்த எழுத்தாளருமான தி. சா. ராஜு அவர்கள் பல வேலைகளுக்கிடையே அன்புகூர்ந்து அனுப்பியுள்ளார்கள்.

நம் வேண்டுகோளுக்கிணங்க, காசியிலுள்ள சக்தி பீடங்களைப் பற்றி 1960 முதல் 1971வரை காசி ஹிந்துப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பணியாற்றிய டாக்டர் டி. பி. சித்தலிங்கம். எம். ஏ. பிஎச், டீ., அவர்கள் அகலமாகவும் ஆழமாகவும் எழுதியுள்ளார்கள். சைவ சித்தாந்தப் புலமையும், கன்னடத்திலிருந்து தமிழுக்குப் பல நூல்களைத் தந்து வரும் பெருமையுமுடைய இவர்கள் காஞ்சியில் பிறந்து, காசியில் வாழ்ந்து, இப்போது மதுரையில் பல்கலைக் கழகத்தில் பணிபுரிகிறார்கள்.

'ஹிந்து' நாளிதழின் செய்தியாளரும் தமிழ் இலக்கியங்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதிவருபவருமான திருநெல்வேலி உயர்திரு. ஏ. வி. சுப்ரமணிய ஐயர் அவர்கள் அன்புகூர்ந்து ஆங்கிலத்தில் கட்டுரை வரைந்துள்ளார்கள்.

1945—இல் காசி இந்து பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்தப் பேராசிரியக் கட்டில் ஏற்படுத்தப்பட்டபோது, அப்பெரும் பதவியை முதலில் வகித்த பேரறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்கள், சித்தாந்தம் ஆசிரியராயும், சைவ சித்தாந்த நூல்கள் பலவற்றின் பதிப்பாளராயும், இலக்கிய வரலாற்று ஆராய்ச்சியாளராயும் தமிழர்களுக்கு அறிமுகமானவர்கள். விசாலாட்சியம்மை அன்னபூரணி ஆகிய மூர்த்தங்களின் நிலை, இதுபற்றிய சமயக் கருத்துக்கள் இலக்கியக் குறிப்புகள் ஆகியவற்றை ஆராய்ந்து இவர் எழுதியுள்ள கட்டுரை இம்மலருக்குத் தனிச் சிறப்புத் தருவதாகும்.

இவ்வாறே சுட்டிக்காட்ட வேண்டிய மற்றொன்று விசுவேசரும் விசாலாட்சியும் என்ற தலைப்பில், தத்புருஷ தேசிகர் பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் வேத சிவாகம மேற்கோள்களுடன் தத்துவ அடிப்படையில் எழுதியிருக்கும்கட்டுரை. சைவ சமய வகுப்புக்கள் நடத்தி எதையும் நுணுகி ஆராய்ந்து முட்டறுத்துத் தெளிவான விளக்கம் கூறும் பேராற்றல் இவர்களுக்குக் கைவரப் பெற்றது.

காஞ்சிபுரத்தில் பத்தாண்டுகள் பணிபுரிந்த செந்தமிழ் இலக்கியச் செம்மல் டாக்டர் ந. சஞ்சீவி எம். ஏ., பிஎச். டி. அவர்கள் காமாட்சியைப் பற்றி இனிய கட்டுரை வழங்கியுள்ளார்கள். இவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்குபவர்கள்; இவ்வாண்டில் காசியில் திருபனந்தாள் அறக்கட்டளைச்

சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார்கள்; பேச்சாற்றலும் எழுத்து வன்மையும் இறைப்பற்றும் மனப் பக்குவமும் உடையவர்கள்.

சென்னை—துறைமுகப் பகுதியில் தம்பு செட்டித் தெரு காளி காம்பாள் கோவிலில் பூசைகளைச் செய்து வருபவர்களும் ஆகமங்களை நன்கு படித்தறிந்தவர்களும் மலாசியாவில் கோலாலம்பூர் மாரியம்மன் கோவில், தமிழ்நாட்டில் பல முக்கியமான கோவில்கள் ஆகியவற்றின் குடமுழுக்குவிழாக் சடங்குகளை இனிது நடத்திவைத்திருப்பவர்களும் காசி யாத்திரை மேற்கொண்டவருமான சிவாச்சாரிய குலதிலகம் சாம்பமூர்த்தி சிவாச்சாரியார் வழங்கியுள்ள கட்டுரையும் மலரில் இடம் பெறுகிறது

ஹிந்தியிலும் ஒரு கட்டுரை அச்சிட்டு, தனி வெளியீடாக வழங்குகிறோம். சென்னை, தட்சிண பாரத ஹிந்தி பிரசார சபை நூலகரும், ஹிந்தியில் நூல்கள் எழுதியிருப்பதற்காக இந்திய அரசு, உ. பி. மாநில அரசுப் பரிசுகளைப் பெற்றிப்பவருமான திரு. R. சௌரிராஜன் அவர்கள் இதற்கு உறுதுணையாக இருந் தார்கள்.

விளம்பரதார், பொதுமக்கள் ஆகியோர் உதவியுடன் இவ்வாறே நா க் பஞ்சவடி தண்டாயுதபாணி கோயில் குடமுழுக்கின் போது முருக வணக்கம் பற்றிய பல புதிய குறிப்புக்கள், திரியம்பகச் சிறப்பு, முருகன் தலங்கள், இடும்பன் வழிபாடு, சூலாயுதமும் வேலா யுதமும், கந்தபுராணம், மராட்டியரின் கணபதி வழிபாடு போன்ற பல அரிய பொருள்களைக் கொண்ட கருவூலத்தை வெளியிட இறை யருள் புரிக.

ராக்கட் வேகத்தில் உருவான இந்த மலரை விரைந்து அச்சிடு வதில் ஊக்கம் காட்டிய மெட்ரோபாலிட்டன் அச்சகத்தாரும் திருச்சி அன்பர் அ. வ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களும் ஏனையோர் அனைவரும் அன்னை விசாலாட்சியுடன் கூடிய விசுவேசர் திருவருளை என்றென்றும் பெற்று இன்பமுடன் வாழ்வார்களாக.

தீபாவளி 1971<br>சென்னை

**'சோமலெ'**





# ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடம்

## ஸ்ரீ ௱ ஸ்ரீ ஜகத்குரு மகா சந்நிதானம்

AL. AR. சோமநாதன் செட்டியார் அவர்களுக்கு

கும்பாபிஷேகம் சிறப்பாய் நடக்க பக்தர்கள் தங்களால் இயன்றதை கொடுத்து உதவி ஸ்ரீகாசி விசாலாட்சி அம்பாள் அருளுக்கும் பாத்திரர்களாகி சர்வா பீஷ்டங்களையும் அடைந்து நல் வாழ்வு வாழவேண்டுமென மகா சந்நிதானம் ஆசீர்வதித்து அருளிய மந்தராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திரா மௌளீஸ்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.





## மிட்டாய்த் திருவிழா

விசுவநாதர் கோவிலில், விசுவநாதர் சந்நிதி உள்ள கருவறைக்கு வெளியே உள்ள முன் மண்டபத்தில் ஒரு சிவலிங்கம், விசுவநாதரைப் போலவே இதுவும் ஒரு தொட்டியினுள், இருக்கிறது. தீபாவளிக்கு அடுத்த நாள், இந்த லிங்கத்தைச் சுற்றியும் உயரேயும் லட்டுகளால் கூம்பிய வடிவமொன்றை அமைப்பது மரபு. தேர் போன்ற உருவ அமைப்பையுடைய இதன் உயரம் இரண்டடி இருக்கலாம். அன்று விசுவநாதரின் திருமுன்பும், பல்வேறு வகையான இனிப்புக்களை அடுக்கி வைத்துப் பின்னர்ப் பிரசாதமாக வழங்குவார்கள். இதற்கும் முன் கூட்டியே பணம் செலுத்திச் சீட்டுப் பெற்றிருக்க வேண்டும்.

எந்த நாளிலும் வடநாட்டு மக்கள் நினைத்த மாத்திரத்தில் விசுவநாதருக்குச் சர்க்கரை, கோவா (பால் கோவா), ஆட்டா மாவு ஆகியவற்றைக் கலந்து பலவண்ணங்களில் படைக்கின்றனர். இவற்றை எங்கே செய்ய வேண்டும், யார் செய்ய வேண்டும் என்ற வரையறை எதுவும் இல்லை. படைக்கும் பொருள்களை, மூடி போட்டு கோவிலுக்குக் கொண்டு போவதுமில்லை. இதனுல் மிகப் பெரிய குளவிகள் விசுவநாதப் பெருமானுக்குப் படைக்கும் பொருள்களை மொய்க்கும். புதிதாக காசிக்குச் செல்பவர்களுக்கு இதைப் பார்த்ததும் அருவருப்பு ஏற்படும்.

விசுவநாதர் கோவிலின் மடைப்பள்ளியில் பண்டா (சிவாச்சாரியார்) காசியில் விசுவேசர்க்கு நிவேதிக்கப்படும் அன்னம், நகரத்தார் விடுதியில் இருந்து மங்கல வாத்தியங்களுடன் வருகிற நிவேதனம் ஒன்றே. இதுமட்டுமே கோவில் மடைப்பள்ளியில் ஆசாரப்படி பிராமணர்களால் செய்து, இலையால் மூடிப் படைக்கப்படுகிறது. இப்போது உள்ள மடைப்பள்ளியும் நகரத்தார் கட்டிக் கொடுத்ததே.

நகரத்தார் நிவேதனம் :—

திருவனந்தல் — பத்தாஸ்மிட்டாய் (பொறி போன்றது. நீண்ட நாள் உபயோகத்துக்கு ஏற்றது.)

உச்சிக்காலம் — பருப்புப் பொங்கல். ஏகாதசி நாளில் அல்வா. திங்கட்கிழமைகளில் கோதுமை ரொட்டி.

இராக்காலம் — சர்க்கரைப் பொங்கல்.



**சம்போ**

(காசி நகரின் புனிதக் காட்சி)

# காசி விசாலாக்ஷி

மு. அருணாசலம்

முழுமுதற் கடவுளைச் சைவமக்கள் சிவ பரம்பொருள் என்று போற்றுகிறார்கள். சிவ வழிபாடு, தென்னாட்டுக்கும், தமிழ் மக்களுக்கும் சிறப்பாக உரிய தனிக் கடவுள் நெறி. பிரபஞ்சம் எங்குமே இந்த ஒரே பொருளின் ஆட்சி நிலவுகிறது என்பது சைவப் பெரு மக்கள் கருத்து. ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாதவனுக்கு, ஆயிரம் திருநாமம் சொல்லி மக்கள் பரவுவது, அவனுடைய சர்வ வியாபாகத் தன்மையையும் மனிதனுடைய வரையறையுடையதாகிய ஏகதேசத் தன்மையையும் காட்டுவதாகும். யார் எந்தப் பெயரால் எங்கு எந்தத் தெய்வத்தை வழிபட்டாலும், அந்த வழிபாடு எல்லாம் முழுமுதற்பொருளாகிய சிவபரம் பொருள் ஒன்றினுக்கே செல்கின்றது என்பது சைவர் கொள்கை. இதையே மாணிக்கவாசகர் தென்னாடுடைய சிவன் எந்நாட்டுக்கும் இறைவனாய் உள்ளான் என்று தமது பாடலில் குறிப்பிட்டார்.

பரத கண்டத்தின் ஒருமைப்பாட்டிற்கு அடையாளம் காசித் தலம். இமயம் முதல் சேது வரை என்று சொல்வதை ''ஆசேது ஹிமாசலம்'' என்று வடமொழியில் சொல்வார்கள். தமிழ்நாட்டில் பல்லாயிரம் சிவாலயங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பெருமையோடு விளங்குகின்றன. ஆனால் விரிந்த வடநாடு முழுமையிலும் சிறப்பான ஒரு நூறு கோயில்கூட காணக் கிடைப்பதரிது. இருப்பினும், வடநாட்டில் கங்கைக் கரையிலுள்ள காசித்தலமே தலங்கள் அனைத்திலும் புனிதமானது என்ற கருத்து வடநாட்டு மக்களிடத்திலும் தமிழ்நாட்டு மக்களிடையிலும் நிலவி வருகிறது. இது இந்திய நாட்டின் பண்டைய ஒருமைப்பாட்டுணர்வின் விளைவேயாகும்.

காசியில் எழுந்தருளியுள்ள பெருமான் திருநாமம் விசுவநாதர், விசுவேசர், அகிலேசர் என்பது. இவர் பூலோகத்துக்கு மட்டும் அல்லாமல் அகிலப்பிரபஞ்சத்துக்கும் நாதர் என்பது இதன் பொருளாகும். (விசுவம்-பிரபஞ்சம்.)

உருவம் இல்லாத பரம்பொருள், மக்கள் உய்யும் பொருட்டு அவர்கள் மனத்தில் நினைக்கத் தக்கதாயும் கண்ணால் காணத் தக்கதாயும் உருவங்கொண்டு வருகின்ற நிலையை மூர்த்தி என்று சொல்லுகிறார்கள். பரம்பொருள் நிலையை நாம் மூன்றாகச் சொல்லுவோம். முதலாவது அருவம். முன்னே சொல்லப்பட்டதுபோல இது மனம் வாக்குக்கு அப்பாற்பட்டது. அவனருளால் இந்த நிலையை ஓர் ஆன்மா தனக்குள்ளே அவன் உணர்த்த உணரலாமே அன்றி, கருவி கரணங் கொண்டு காண வியலாதது. அடுத்து உயிர்களுக்கு அருள் செய்யும் கருணையோடு அந்தப் பொருள் காட்சி தருகின்ற கோலம் சிவலிங்கத் திருமேனி. இது கண் முன்னே காண்கின்ற திடமான

வடிவம் கொண்டிருப்பது உண்மை; இலிங்க வடிவம் நீண்டுருண்ட கல்லாக இருக்கிறது. ஆனால், சந்திரசேகரர் நடராசர் மூர்த்திகளுக்கு இருப்பது போல இந்தத் திருமேனிக்கு எந்த உறுப்புக்களும் இல்லை. உறுப்பில்லாமையால் அருவம், வடிவம் இருப்பதால் உருவம்; ஆகவே இதை ஆன்றோர் அருவுருவம், ரூபாரூபம் என்பார்கள். ஆலயத்தில் நாம் கண்ணால் கண்டு வழிபடத் தக்கவாறு உருவம் உடைய மூர்த்திகள்—கணபதி, முருகன், நடராசர், சந்திரசேகரர், கல்யாண சுந்தரர், பிட்சாடனர், அர்த்தநாரீசுரர் ஆகியோர் எல்லாம்—உருவத் திருமேனிகள். இந்த மூன்றுக்கும் வேறுபாடு இல்லை. உருவமாகிய மூர்த்தியைக் காணும் போதும், அருவுருவாகிய சிவலிங்கத்தைக் காணும் போதும், நாம் இவற்றுக்கு மூலமான அருவப் பொருளையே சிந்திக்க வேண்டும். வழிபாட்டு முறைகளும் சாத்திரங்களும் தோத்திரங்களும் போதிப்பது இதுவே.

பரம்பொருளை அப்பனும் அம்மையுமாக நினைப்பது ஒருவகை. அம்மையும் அப்பனும் இக உலகத்தில் மக்களுக்கு ஆதரவு தருப வர்கள். இதுபோல ஆன்ம உலகில் அருவப் பொருளாய் உள்ள இறைவனை அப்பனாகவும் அம்மையாகவும் கற்பனை செய்து துதிப்பதில் மக்களுக்கு நம்பிக்கையும் ஆர்வமும் ஆறுதலும் பிறக்கிறது. இஃது இயல்பே. இதை விரித்துரைப்பது அவசியமில்லை. தந்தையும் தாயு மாகி, அப்பன் நீ, அம்மை நீ, அம்மையே அப்பா ஒப்பிலாமணியே என்பன போன்ற திருமுறைப் பாசுரங்களும் இதையே நமக்கு எடுத் துரைக்கின்றன.

கோயில்கள் இதை வடிவத்தால் காட்டுகின்றன. பிற்காலத்தில் சிவாலயங்களில் அம்பிகைக்குத் தனிக் கோயில் அமைக்கப் பெற்று, சத்தி வழிபாடு பெருகியது இந்த நினைவினால்தான். தாயுமான மூர்த்தியும் இதை விளக்குவதே. சிவம் சக்தி என்ற பேதம் இல்லாத போயினும்கூட, அவனுடைய கருணைக்குத் தனி உருவம் கொடுத்து 'அம்மா' என்று அழைத்து வழிபடுவதில் சிற்றறிவுடைய மக்கள் மன நிறைவு பெறுகிறார்கள். தமிழ்நாட்டில் கிராமம் தோறும் ஏற்பட் டுள்ள அம்பிகை கோயில் இந்த மன நிறைவினால் எழுந்த ஒரு சின்னமேயாகும். அம்பிகையைத் தனியே வழிபடுவதனால் அம்பிகை வேறு என்பது பொருளல்ல. ஒன்று என்று காட்டவே அர்த்தநாரீசுரர் வடிவமும் அதுபற்றிய கதைகளும் எழுந்தன. கோயில்களில் அம்பிகை கோயில் அமைத்து இருப்பது தமிழ் நாகரிகத்தின் சிறப்பான விளைவு. ஒவ்வொரு கோயிலுக்கும் அங்குள்ள சிவலிங்கத் திருமேனிக்கும், அம்பிகையின் திருவுருவுக்கும், தனியான பெயர்கள் சூட்டப்பட்டன. அப்பெயர்கள் யாவும் அந்த அந்தத் தலத்துக்கும், ஆங்காங்குப் பக்தர்களுக்குச் சிவ பெருமான் அருள் புரிந்த வரலாற்றுக்கும் தொடர்புடையன. இத் தொடர்பை இங்கு விளக்கில் பெருகும்; இது எல்லோரும் நன்கு அறிந்தது.

காசித் தலத்தில் பெருமான் திருநாமம் விசுவநாதர் என்பது. இதன் பொருள் முன்னே சொல்லப்பட்டது. அம்பிகையின் திருநாமம் விசாலாட்சி என்பது. இறைவன் சகல பிரபஞ்சங்களுக்கும் நாதன் என்ற முறையில், அவனுடைய தேவி சகல பிரபஞ்சத்திலும் உள்ள ஜீவராசிகள் அனைத்தையும் தன் கண்ணால் கண்டு அருள் சுரக்கிறாள்.

அதுபற்றியே அவள் கண்கள் அனைத்தையும் தழுவிக் காணும் பொருட்டு விசாலமாயுள்ளாள் என்ற கற்பனை எழுந்தது. அவள் பெயர் விசாலாட்சி. தமிழ்ப்புலவர்கள் அம்மையை ''பெருந்தடங்கண்ணம்மை'' என்று சொல்லி மகிழ்வார்கள். விசாலாட்சி என்ற பெயர் காசிக்கே சிறப்பானது. இது பொதுவாக முன் சொன்னபடி, தமிழ் மக்கள் இறைவனைக் குறித்துக் கொண்ட அம்மை அப்பர் ஆகிய கற்பனையில் விளைந்த திருவடிவாகும்.

ஸ்ரீ லலிதா சகஸ்ரநாமங்களில் விசாலாக்ஷ்யை நம! என்பதும் ஒன்று; இந்த சகஸ்ரநாமங்கள் வேதங்களையடுத்துத் தொகுக்கப் பட்டவை. காலத்தால் மிகவும் பழையவை.

காசி, இந்திய மக்கள் அனைவருக்குமே சிறந்த புண்ணியத்தல மாதலால், அதனிடத்து மிக்க ஈடுபாடு கொண்ட தமிழ் மக்கள், எல்லோரும் காசிக்குச் சென்று வழிபட இயலாத நிலையை மனத்தில் கொண்டு, தங்கள் தங்கள் ஊரில் உள்ள ஆலயத்திலும் காசி விசுவநாதரைப் பிரதிட்டை செய்து கொண்டார்கள். ஆலய நிர்மாணத்தில் முதல் பிராகாரத்தில் வாயு மூலையில் திருமாளிகைப் பத்தியிலோ தனிக் கோயிலாகவோ காசி விசுவநாதரைப் பிரதிட்டை செய்ய வேண்டுமென்ற விதியும் வழக்கும் ஏற்பட்டிருக்கின்றன. சில கோயில்களில் இவ்விசுவநாதரோடுகூட விசாலாட்சி அம்மையையும் பிரதிட்டை செய்திருப்பது உண்டு.

தமிழ்நாட்டில் பாடல் பெற்றனவும் பெறுதனவும் அல்லாமல், புதிதாகச் சைவப் பெருமக்கள் கோயில் கட்டியிருக்கிறுர்கள். அப்படி கட்டியவற்றுள் சிலவே அவ்விடத்துச் சார்பான பெயர்களைப் பெற்றிருக்கும். பெரும்பான்மையானவை மீனுட்சி சுந்தரேசர் கோயில், கயிலாயநாதர் திரிபுரசுந்தரி கோயில், விசுவநாதர் விசாலாட்சி கோயில் என்றே பெயரிடப்பட்டிருக்கக் காணலாம்.

குடந்தைக் காரோணம் என்பது கும்பகோணம் நகரில் உள்ள பாடல் பெற்ற மூன்று தலங்களில் ஒன்று. இத்தலம் சம்பந்தர் பதிகமுடையது. இங்கு சுவாமி காசிவிசுவநாதர். அம்பிகை காசி விசாலாட்சி என்றே இன்றும் வழங்கப் பெறும். (குடந்தை சோமநாதர் கோயிலே குடந்தைக் காரோணம் என்றும் சிலர் சொல்வதுண்டு.) பின்னும் சில தலங்களில் விசாலாட்சி என்ற பெயர் அம்மை பெயராக அமைந்திருப்பதைக் காண்கிறேம்— திருப்பைஞ்ஞீலி, மேலைக் கபிலஸ்தலம். விசாலாட்சி என்பதன் தமிழாகிய தடங்கண்ணி என்ற பெயரைக் கோடிக்கரை, தினைநகர் முதலான இடங்களில் அம்மை பெயராகக் காணலாம்.

பெருந்தடங் கண்ணம்மை என்ற பெயரை அமைத்துக் குமரகுருபரர் இருபாடல்கள் பாடியிருக்கிறுர்.

நீர்கொண்ட கடலாடை நிலமகளுக் கணியான
கார்கொண்ட பொழிற்காசிக் கடிநகரங் குளிர்தூங்க
இடமருங்கிற் சிறுமருங்குற் பெருந்தடங்க ணின்னமிர்தும்

சடைமருங்கி னெடுந்திரைக்கைப் பெண்ணமிர்துந்தலை சிறப்பக்
கண்கதுவு கடவுண்மணி தெரிந்தமரர் கம்மியன் செய்
விண்கதுவு பொலங்குடுமி விமானத்தின்மிசைப் பொலிந்தோய்.

முயலாம லேதவ முத்தித் திருவை முயங்க நல்கும்
கயலார் பெருந்தடங் கண்ணிபங் காரருட் காசியிலேங்க
செயலாவ தொன்றிலை வாளா நெடுந்துயில் செய்யுமுங்கள்
பயலாக வேபணி செய்வார் புவனம் படைப்பவரே.

நம் நாட்டில் ஆங்காங்கு பலதலப் பெயர்களையும் சுவாமி பெயர்களையும் பல காரணம் பற்றி ஒரு தொடராகச் சேர்த்து வழங்கும் வழக்கம் உண்டு. அவ்வாறு வழங்கும் ஒரு தொடர் காசி விசாலாட்சி, கஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி என்பது.

காசிக்குரிய பெயர்களில் மகாஸ்மசானம் என்பது ஒன்று. மயானம் என்பது எல்லாம் சாம்பலாகும் இடம். உடல் சாம்பலாவது ஊர் தோறுமுள்ள மயானத்தில் (சுடுகாட்டில்). ஆனால் உடலை விட்டு உயிர் பிரிந்த பிறகும் கூட, உயிரைப் பற்றியிருந்த ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் உடலோடு எரிந்து படுவது இல்லை; உயிரைத் தொடர்ந்தே வருகின்றன. இதனால்தான் உயிர்கள் மீண்டும் பிறவி எடுத்து, பின் இறந்து, பிறப்பு இறப்பு என்ற சுழலில் சிக்கி, அவதியுறுகின்றன. இந்த அவதி காசியில் நீங்குகிறது. மகாஸ்மசானம் என்பதன் பொருள் இதுவே. இங்கு உயிரை வாட்டுகின்ற மலங்கள் சாம்பலாவதால் இது மகாஸ்மசானம் எனப்பட்டது.இந்த மயானத்தில் இறந்தவருக்குப்பின் மலங்கள் இல்லை ஆகவே, பிறவி இல்லை, பின் முத்திதான் என்பது பொருளாகும். மயானம் என்ற இந்தக் கருத்தில் தமிழ் மக்களுக்கு ஈடுபாடு மிகுதி உண்டு. கச்சி மயானம், கடவூர் மயானம், நாலூர் மயானம் என்ற தலப் பெயர்களைக் காண்க. கடவூர் மயானம் மகாஸ்மசானம் என்று கருதப்பட்டது போலும். அதனால் தான் அங்கு சுவாமிக்குப் பெரிய பெருமான் அடிகள் என்ற பெயர் தேவாரத்தில் வழங்குகிறது. சம்பந்தர் இங்கு ''ஆசை தீரக் கொடுப்பார்'' என்று சொல்கிறார். அப்பர் சுவாமிகள் ''தன்னை நோக்கித் தொழுது எழுவார்க் கெல்லாம் பின்னை என்னர் பெருமான் அடிகளே'' என்றார். சுந்தரமூர்த்தி ''எல்லார்க்கும் இல்லை என்னாது அருள் செய்வார்'', ''பீடை தீர அடியாருக்கு அருளும் பெருமான்'' என்றெல்லாம் பாடுகிறார். இவை எல்லாம், முன்னமே மலங்களைப் போக்கு முத்தி அளிப்பதால் மயானம் என்ற பெயர் வந்தது என்று முன் கூறிய கருத்தோடு ஒப்பு நோக்கத் தக்கவை.

இனி, காசியாகிய தலத்தில் இறந்தவர்கள் முத்தி பெறுவர்கள் என்பது சாத்திரத்தின் கூற்று. 'காசியில் இறக்க முத்தி' என்பது பழமொழி. காசியில் இறப்போருக்கு, பிறவித் துன்பத்தால் வந்த களைப்பு நீங்கிடுமாறு விசாலாட்சி அம்மையார் தமது முன்றானையால் விசிற விசுவநாதப் பெருமான், அவர் உயிர் பிரியுந்தருணத்தில், அவர் செவியில் தாரக மந்திரத்தை உபதேசம் செய்து பரமுத்தி யளிப்பார் என்று புராணங்கள் கூறும்: பின் வரும் காசி கண்டப் பாடல் (அகத்தியர் விந்தவரையடைந்தது, 15) காண்க:

இத்தலை எய்தி இறக்குநர் யாரும் இளைப்பாற
உத்தரிகங்கொடு மாதுமைவீசிட உமையோர்பால்
வைத்த அரும்பொருள் மேவருதாரக மறையோதி
முத்தி அளித்திடும் இப்பதியார் விட முயல்வாரே.

இக்கருத்தை அடுத்த நூற்றாண்டில் வந்த குமரகுருபர சுவாமிகளும் காசிக் கலம்பகத்தில் பாடியிருப்பதும் அறியத் தக்கது:




கங்கை சூழ் கிடந்த காசி வாணு,
ஐவளி பித்தெனு மவைதலை யெடுப்ப,
மெய்விட் டைவருங் கைவிடு மேல்வையில்,
மாமுதல் தடிந்த காமரு குழவியும்
பொழிமதங் கரையும் மழவிளங் களிறும்
மூண்டெழு மானம் பூண்டழுக் கறுப்ப,
இடக்கையின் அணைத்துநின் மடித்தலத் திருத்தி
உலகமோ ரேழும் பலமுறை பயந்தும்
முதிரா விளமுலை முற்றிழை மடந்தை
ஒண்தொடித் தடக்கையின் வீசு நுண்துகில்
தோகையிற் பிறந்த நாகிளந் தென்றல்
மோகமுந் தளர்ச்சியுந் தாகமுந் தணிப்ப
மறைமுதற் பொருளின் நிறைசுவை யமுதினை
அஞ்செவி மடுத்துண வூட்டிநின்
குஞ்சித வடிக்கீழ்க் குடியிருத் துகவே.

(முற்றிழை மடந்தை விசாலாட்சியம்மை)

அம்மையார் ஒண் தொடித் தடக்கையின் வீசு துண் துகில் தோகையிற் பிறந்த தென்றல் மோகமும் தளர்ச்சியும் தாகமும் தணிப்பதென்பது, திருவருள் என்ற சத்தி நிபாதம் விளையவே, அந்த அருள் நிழலில் தங்கிய ஆன்மா வினைகளின் பந்தமும் மலப் பிடிப்பால் விளைந்த பிறவி வெம்மையும் தீர்ந்து முத்தி பெறுகிறது என்பது குறிப்பு.

காலத்தில் மேலும் ஒரு நூற்றாண்டு கடந்து வந்து பார்க்கும் போது, 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிவஞானதேசிகர் காசியில் சென்று தங்கிய காலை அங்குள்ள மூர்த்திகளுக்குப் பல பதிகங்கள் பாடியிருக்கக் காண்கிறோம். அவற்றுள் ஒன்று தாரகப் பத்து என்பது. தாரகம் என்பது பிரணவ மந்திரம். இப்பதிகம் விசாலாட்சியம்மை பங்களுகிய விசுவநாதப் பெருமானிடத்துக் கிளி, மயில், குயில், வண்டு, நாரை, பூவை, அன்னம், புறு, அன்றில் புள்ளினங்கள் எனப் பறவைகளைத் தூதுவிட்டு தாரக மந்திரத்தை அவன் தனக்கு வந்து உபதேசிப்பது எந்த நாள் என்று கேட்டு வந்து கூறுமாறு உரைப்பதாகும். பின்வருவது அதன் பாடல்களில் ஒன்று.

மின்னும்உத்த ரிகத்தை வீசும்விசா லாட்சி பங்கன்
தன்னிகராங் காசியில்வாழ் சற்குருமுன் சென்றெனக்குள்
உன்னுமொரு தாரகத்தை யோதுநா ளென்றென்றிங்
கன்னமே கேட்டுவந்தென் னகமகிழ விளம்புவையே.

விசாலாட்சியம்மை காசியில் இறக்கும் உயிர்களுக்கு மரண காலத்தில் பிறவி வெம்மை நீங்குமாறு உத்தரிகத்தால் மெல்ல விசிறி விசுவநாதரால் தாரகமந்திரத்தைச் செவியில் ஓதுவித்து முத்தித் துறை சேர அருள் செய்வார் என்பதைப் பல பாடல்களில் கூறுகிறார்;

பவமெனுஞ் சாகரத் தாக்கையெனு மோட்டையாம்
படகின்மே லெறிநிற்பேன்
பரையருட் காற்றின்றியே பிணிச் சுழலினுட்
பட்டுத் திசைதப்பியே
கவலைகள் வராமலே கௌரியுன் கரகம்ப
காருண்ய வுத்தரீயக்
காற்றிறைவர் தாரகச் சத்தமொ டெறிந்தருட்
காசியூ ரானந்தமாஞ்
சிவமெனுங் கரைதுறையி லேறவருள்.

'தாயே, மகிழ் விசாலாட்சியுன் அடியருக்கடியனேன் மரணம் மங்கள காசியில், அராவின் விடமென்ன வருமெய்ப்பிணி ஒழித்தே அநாயாச மரண மருளுவாய்' என்று அன்னபூரணி துதியில் கூறுகிறார்.

இறுதிக் கூற்றில் நமக்கு ஒரு சிறப்பான பொருள் கிடைக்கிறது. காசியில் விசுவநாதர் கோயிலுக்குப் போகிற வழியில் அன்னபூரணி கோயில் அமைந்திருக்கிறது. வடநாட்டுப் பக்தர் அனைவரும் அன்னபூரணியிடத்தேதான் மிக்க ஈடுபாடுடையவர்கள். வழிபாடு அன்னபூரணிக்கே அதிகம். அவர்கள் விசாலாட்சி வழிபாடு அதிகம் செய்வதில்லை. விசாலாட்சி கோயிலும் அருகில் இல்லாமல் வேறிடத்தில் உள்ளது. இங்குத் தேடிச் சென்று வழிபடுவோரும் பெரும்பான்மை தமிழ் நாட்டினரே. இந்த நிலை பலருக்கு எளிதில் விளங்காது.

விசாலாட்சி என்ற சத்தி, காசியில் விசுவநாதரோடு அபின்னமான சத்தி. விசாலட்சிக்கும் விசுவநாதருக்கும் வேறுபாடு இல்லை. இது தமிழருடைய சைவ மதம், ஒரே பரம்பொருள் அப்பனாக விசுவநாதராகவும் அம்மையாக விசாலாட்சியாகவும் காட்சி தருகிறது. இந்தத் தத்துவ நுட்பம் சைவ சித்தாந்தம் அறிந்தவருக்கே நன்கு புரியும். ஆனால் வடஇந்தியாவில் தனித்தனித் தெய்வ வழிபாடு அதிகம். இராமனை இராமனாகவும் கண்ணனைக் கண்ணனாகவும் பாண்டுரங்கனைப் பாண்டுரங்கனாகவும் மட்டுமே கொண்டு அங்கு வழிபடுகிறார்கள். காண்கிற உருவத் திருமேனியை மறந்து அப்பாற்சென்று யாவையும் சுட்டுகின்ற ஒரு பரம்பொருளை அவர்கள் எண்ணுவது இல்லை. அன்னபூரணி வழிபாடும் இத்தகையதே. அன்னபூரணி பராசக்தியான விசாலாட்சி கொண்ட கோலங்களில் ஒன்று (ஓர் அவசரம், நிலை, என்று சமய பரிபாஷையில் சொல்வோம்.) அன்னபூரணியாவது,

ஆன்மாக்கள் உய்யும் பொருட்டாக பிட்சாடன வடிவத்தில் வந்த பெருமானுக்கும் பிச்சையிட்ட நிலை, அன்னபூரணியை வழிபட்டால் தங்கள் காரியங்கள் கைகூடும் என்று சாமானிய மக்கள் நினைப்பது சரியே. அவரவர் அந்த நேரத் துன்பத்திலிருந்து விடுதலை பெற்று வெற்றியடைவதை எண்ணுகிறார்களேயன்றி, முடிவான முத்தியை நாடுபவர் அரியர். இதனால்தான் அன்னபூரணிக்குச் சிறப்பு. பராசக்தி நிலையிலுள்ள விசாலாட்சியை உணர்வதும் போற்றுவதும் பிறருக்கு அருமை. அன்னபூரணி என்பது விசாலட்சியே. விசாலாட்சியே பல சத்திகளாயும் இருந்து அன்னபூரணியாயும் விளையாடுகிறாள் என்று சிவஞான தேசிகர் அன்னபூரணிப் பதிகத்தில் பாடுகிறார்.

கன்னிய குமாரியருள் காந்திமதி மீனாக்ஷி
    கருணைபரு வதவர்த்தனி
கமலைப் பராசத்தி சிவ காம சுந்தரி
    காழியுமை பிரமவித்தை
தன்னிகரி லாஞான வபயவர தாம்பிகை
    தைய லபிராமி மங்கை
தந்தஅகி லாண்ட நாயகிஅறம் வளர்த்தவள்
    தன்னருள்செய் காமாக்ஷியிங்கு
என்னையாள் கௌரிஜ் வாலாமுகி உண்ணுமுலை
    இலங்கு நீலாயதாக்ஷி
எழிற்பிரம ராம்பிகை இலங்குபார் வதியாதி
    எண்ணிலா நாமரூப
அன்னையாய்க் காசி முதலாகிய தலத்துவிளை
    யாடிடு விசாலாக்ஷியாம்
அண்டகோ டிகள் பணிஅகண்டபூரணியென்னும்
    அன்னபூ ரணியன்னையே.

இக்கருத்துக்களை நன்குணர்ந்தால் காசியில் விசாலாட்சிக்கும் அன்னபூரணிக்குமுள்ள தொடர்பும் நிலையும் நன்கு விளங்கும். விசாலாட்சி பராசத்தி, அன்னபூரணி அதனுள் ஒரு கூறாகிய சக்தி.

சத்திபீடம் அறுபத்து நான்கு என்று தேவிபாகவதம் கூறும். வடமொழி நூலில் பீடம் அமைந்துள்ள தலமும் பீடத்தின் பெயரும் சொல்லப்பட்டுள்ளன. அவற்றுள் முக்கியமாய் நாம் கருதத்தக்கவை பின்வருவன: மதுரையில் மீனாட்சி பீடம்; வேதாரணியத்தில் சுந்தரி பீடம்; ஸ்ரீகாஞ்சியில் அன்னபூரணி பீடம்; ஏகாம்பர பீடம்; கமலாலயத்தில் (திருவாரூரில்) கமலை பீடம்; கேதாரத்தில் மார்க்க தாயினி பீடம்; கயையில் மங்கள பீடம்; அவிமுத்தத்தில் (காசி) விசாலாட்சி பீடம்; ஞானியர் இதய கமலத்தில் பரமேசுவரி பீடம் இவற்றுள் காசிக்குரியது விசாலாட்சி பீடம் என்பதும் அன்னபூரணி பீடம் ஸ்ரீ காஞ்சிக்குரியது என்பதும் நாம் சிந்திக்கத்தக்கவை. விசாலாட்சி பீடம் யோக பீடம் என்றும் சொல்லப் பெறுகிறது. இந்த யோக பீடத்தின் வழிபாடு மிக்க சிறப்புடையது என்று காசி கண்டம் கூறும்.

சித்திரைத் திங்கடன்னின் முழுமதி சேருங்காலே
இத்தலையெய்தியிந்த இலிங்கத்தை வழிபட்டோர்கள்
முத்தியிலடை வர்சித்தியோக பீடத்தின் முன்னுட்
பத்தியின் வழிபட்டுய்ந் தோர்பலருளராவரன்றே.

அட்டமிதோறுமிந்தப் பீடத்தினருச்சித் தோர்க்கு
மட்டவிழ் கூந்தற் சத்திரமினிதளிக்கு மென்னுக்
கட்டழலதனுல் வென்றி வார்சிலேக்காமற் காய்ந்த
விட்டொளிர் திங்கள் வேணி விமலனுமறைந்து போனுன்.

பல நூல்களில் காசியின் பெருமை கூறப்பட்டிருப்பினும், தனியாகத் தமிழில் காசி பற்றி எழுந்துள்ள நூல்கள் நான்கு: அதிவீரராம பாண்டியர் செய்த காசிகண்டம்—16 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி. குமரகுருபரர் பாடிய காசிக் கலம்பகம் 17ஆம் நூற்றுண்டின் முற்பகுதி. 18ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் தருமபுரம் சிவஞான தேசிகர்என்ற குருமூர்த்தி காசியில் சென்று தங்கி, அங்குள்ள துண்டிராஜ கணபதி, விசுவநாதர், கேதாரநாதர், விருத்தகானேசுவரர், கால பைரவர், தாரகம், அன்னபூரணியம்மை, கேதார கௌரி, பாகீரதியம்மை, கதிர்காம வேலவர் ஆகிய பத்து மூர்த்திகளுக்கும் பாடிய திருவருட்பா என வழங்கும் பத்துப் பதிகங்கள்; 19ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் மீனுட்சி சுந்தரம் பிள்ளை பாடிய காசி ரகசியம் என வழங்கும் புராணம்.

இவற்றுள் தமிழில் காசி மான்மியம் கூறும் நூல்கள் இரண்டில் பழமையானது அதி வீரராம பாண்டியன் (கி. பி. 1564-1604) செய்த காசி கண்டம், 2525 பாடலுடையது; மற்றது மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை பாடிய காசி ரகசியம் என்பது; 1012 பாடலுடையது. பின்னதில் விசுவநாதருக்கும் அன்னபூரணிக்கும் துதியுண்டேயன்றி, விசாலாட்சியம்மைக்குத் துதியில்லை. ஆனுல் அதிவீரராம பாண்டியன் பாடிய பெருநூலில் விசுவநாதருக்கு அடுத்து விசாலாட்சி துதியே வைக்கப்பட்டுள்ளது; அன்னபூரணி துதியில்லை. இதற்கு ஒரு வகையில் காரணங் கூறுதல் கூடும். இதைப் பாடிய அதிவீரராம பாண்டியர் 16ஆம் நூற்றுண்டின் பிற்பாதியில் தென் காசியில் அரசாண்ட பாண்டி மன்னர், 16ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் மாலிக்காபூர் தலைமையில் முகம்மதியப் படை மதுரையைக் கைப்பற்றி நகரையும் நாட்டையும் அழித்த போது, பாண்டியர் தெற்கு நோக்கி ஓடிவிட்டனர். ஓடியவர்கள் தென்காசி என்று இன்று வழங்கும் நகருக்கு வந்து அங்கிருந்து தென் பகுதியை மட்டும் ஆட்சி புரிந்தனர். இவர்கள் பரம்பரையில் வந்த சடைய வர்மன் பராக்கிரம பாண்டின் 1411-1463இல் தென் காசியிலிருந்து அரசாண்டான். இவன் ஆட்சியில் மிக்க சிறப்பான செய்தி தென் காசிக் கோயிலேக் கட்டுவித்ததாகும். சிவபெருமான் கனவில் கோயில் கட்டுமாறு இவனுக்கு உரைக்க, இவன் இக்கோயில் கட்டினுன். கிலமாயிருந்த ஒரு பழங் கோயிலேச் சார்ந்த இப் பெருங்கோயிலேப் புதிதாக அமைத்தான். இக் கோயிற் சிற்பங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. இங்கு, சுவாமி விசுவநாதர், அம்பிகை விசாலாட்சி; ஊரும் தென்காசியல்லவா? இப்பாண்டியனுக்கு நூறு ஆண்டுகள் பிற்பட்டு வந்து இதே நகரில் ஆட்சி புரிந்தவர் அதிவீரராம

பாண்டியர்; சிறந்த சிவபக்தரான இவர் இவ்விசுவநாதரிடமும் விசாலாட்சியிடமும் தொண்டு பூண்டொழுகியதில் வியப்பில்லை. இந்த நினைவே இவரை காசி கண்டம் மொழிபெயர்க்கச் செய்தது; தாம் பாடிய காசி கண்டத்தில் சிறப்பான விசாலாட்சி துதியமைக்கச் செய்தது என்று நாம் கருதுவது பொருத்தமே. பின்வருவது அத் துதிப் பாடல் :

அலகிலாக் கருணை என்னும்
    அந்தளிர் ஈன்று தொல்லை
உலகெல்லாம் பூத்துக் கங்கை
    உவட்டெடுத் தொழுகும் சென்னி
மலையினிற் படர்ந்த பச்சை
    மரகதக் கொடியை ஞானக்
கலையமு தொழுகு தீஞ்சொற்
    கனியினைக் கருத்துள் வைப்பாம்.

காசிக்கு ஆனந்தவனம், ஆனந்தக் கானகம், ஆனந்தக்கானம் என்றெல்லாம் பெயர்கள் வழங்கும். காசியில் இறக்கின்ற உயிர்கள், எமவாதனை நீங்கி வினைகளும் மலமும் விலகி, நேரே முத்தியாகிய பேரின்பம் பெறும். இதுபற்றியே இத்தலம் ஆனந்தவனம் என்று பெயர் பெறுகிறது. இம்முத்தியைத் தருகின்ற விசாலாட்சி அம்மையைப் புராணங்கள் ஆனந்தவல்லி என்றும் விசுவேசரை ஆனந்தக் கூத்தர் என்றும் பெயர்கள் வழங்கும். இப்பெயர்களை அமைத்துக் குமரகுருபரர் தமக்கே உரிய சொல் நயம் பொருந்த அருமையான ஒரு பாடல் பாடியிருக்கிறார். உலகத்தாரை விளித்து நீங்கள் விசுவநாதருடைய அருட்கடலில் திளைக்காவிட்டால், பிறவி வெள்ளமாகிய துன்பத்தில் விழுந்து இளைத்து அலைவீர் என்று காசிக் கலம்பகத்தில் ஒரு பாடலில் நயம் பொருந்தப் பாடியிருக்கிறார்;

ஆனந்த வல்லியுடன் ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தாடு அருட்கடலை—ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடும் கூடாதேல் இப்பிறவி
வெள்ளத்து இளைத்தாடு வீர்.

இதுகாறும் காசியின் சிறப்பு, காசியில் இறக்க முத்தி என்பதன் தத்துவம், விசாலாட்சி அம்மை உயிர்களுக்குச் செய்யும் உபகாரம், விசாலாட்சியம்மை அன்னபூரணி ஆகிய மூர்த்தங்களின் நிலை இது பற்றிய இலக்கியக் குறிப்புக்கள் என்ற தொடர்புடைய கருத்துக்களை ஆராய்ந்தோம்.

---

உ

பாலருவாயர் துணை

# விசாலாட்சியும் விசுவேசரும்

## சிவஶ்ரீ தத்புருஷ தேசிகர்

புண்ணிய பூமியாகிய நமது பாரத நாட்டில் திருத்தலங்களின் மிகுதியால் சிறப்புற்று விளங்குவது தென் திசை. தீர்த்தங்களின் மிகுதியால் சிறப்புற்று விளங்குவது வடதிசை. தெய்வத் திருநதி யாகிய கங்கையாறு வருண கட்டம் முதல் அசி கட்டம் வரையுள்ள அறுபத்து நான்கு புண்ணியத் துறைகளைக் கொண்டு காசித் திருத் தலத்தைத் திருவருள் மயமாகச் செய்திருக்கிறது. பிறவிப் பெருங் கடலில் இடையறுது அழுந்தித் துன்புறுகின்ற உயிர்கள் பிறவிக் கடலைக் கடந்து துன்பத்தில் நீங்கிப் பேரின்ப முத்தியைப் பெறும் வண்ணம் எளிதிற் கூட்டுவது காசித் திருத்தலம். ''தூசினல் அம்மை வீசத் தொடையின் மேற் கிடத்தித் துஞ்சும், ஆசிலா உயிர்கட் கெல்லாம் அஞ்செழுத்தை'' விசுவேசர் உபதேசித் தருளுவாரென்பது, இத்திருத்தலத்திற்கு அமைந்த தனிச் சிறப்பாகும்.

பிரமனது உடலாக விளங்கும் பிரமாண்டத்தில் நிலவுலகத் திற்குக் கீழேயுள்ள ஏழு உலகங்களும் அவனது தொடை மூலம், தொடைநடு, முழந்தாள், கணைக்கால், பரடு, புறவடி, காற் பெருவிரல் ஆகிய உறுப்புக்களாக உள்ளன. நிலவுலகத்தில் பிரமனது மூலாதாரம் திருவாரூர், சுவாதிட்டானம் திருவானைக்கா, மணிபூரகம் திருவண்ணு மலை, அநாகதம் சிதம்பரம், விசுத்தி திருக்காளத்தி, ஆக்ஞை காசி, பிரமரந்திரம் கயிலாயம், துவாதசாந்தம் மதுரை. குதத்துக்கும், குறிக்கும் இடையிலிருக்கும் மூலாதாரத்தில் தியாகேசராகவும் குறியிடமாகிய சுவாதிட்டானத்தில் சம்புராயகராகவும் நாபியிட மாகிய மணிபூரகத்தில் அருணசலேசராகவும் இதய இடமாகிய அநாக தத்தில் சபாபதியாகவும் கழுத்து இடமாகிய விசுத்தியில் காளத்தி நாதராகவும் புருவநடு இடமாகிய ஆக்ஞையில் விசுவேசராகவும் தலை இடமாகிய பிரமரந்திரத்தில் சீகண்ட சிவமாகவும் தலைக்கு மேல் பன்னிரண்டு அங்குல இடமாகிய துவாதசாந்தத்தில் சுந்தரேசராக வும் சிவபெருமான் எழுந்தருளியிருப்பார். இது பற்றிக் கூறும் அகத்திய சங்கிதையில் ''வாரணசி மகாக்ஷேத்ரம் ஆக்ஞாஸ்தானம் ஸ்வயம்புவ;'' என்று காசித் திருத்தலம் குறிக்கப் பெறுகின்றது.

நமது உடலுறுப்புக்களில் சிவ பெருமானை நிலை நிறுத்தித் தியானிப்பதற்குரிய இடம் புருவ நடுவேயாகும். விதிப்படி சிவ தீட்சை பெற்று முறைப்படி சிவபூசை யாகியவற்றைச் செய்து வருகின்ற சாதகர்கள் புருவநடுவில் சிவபெருமானைத் தியானிக்கும் பொழுது அங்கே விளங்கி அருளுபவர் விசுவேசரே யாவர். இடர்க்

கடலிற் பட்டு இளைத்துக் கொண்டிருக்கிற நாம் இடர் நீங்கி இன்பம் பெற வேண்டுமானால், இடருக்கு ஏதுவாயிருக்கும் பிறப்பிறப்புக்களி லிருந்து விடுதலை பெற வேண்டும். அந்த விடுதலைக்குச் சாதனமாகக் கைக் கொள்ள வேண்டிய ஒன்று; சிவபெருமானது திருவருளும் இடை யீடுபடாது வழிவழியாகத் தொடர்ச்சியுடன் வருகின்ற குருவருளும் நிரம்பப் பெற்றவராய் ''நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'' என்னும் குறிக்கோளுடைய வராயிருக்கும் ஞானசிரியரை அடைந்து சிவதீட்சை பெற்றுத் திருவைந்தெழுத்தை விதிப்படி கணிப்பதே யாகும்.

ஒவ்வொரு உயிரும் தேகத்தை விட்டுப் பிரிகிற பொழுது எதை எண்ணுகிறதோ; அதை மறுபிறவியில் அடைந்தே தீரும். இதை ''மரிக்கும் போதுன்னும் வடிவினை ஆவி, பரிக்கும் நினைவு பரித்து'' என்று அருள் நூல் அறிவிக்கின்றது. வாழ்நாள் முழுவதும் இடையறாது திருவைந்தெழுத்தை ஓதி வர வேண்டுமென்பது, இறுதிக் காலத்தில் அந்தப் பயிற்சி தளர்ந்து போகாமல் நிலை நிற்றற் பொருட்டேயாம். ''நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே'' என்ற அருள் வாக்கு இதை உணர்த்த எழுந்ததே யாகும். முற்றத் துறந்த முனிவர் பெருமானாகிய பட்டினத்தடிகள் ''ஐயும் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்து, மெய்யும் பொய் ஆகி விடுகின்ற போதொன்று வேண்டுவன் யான், செய்யும் திருவொற்றியூருடை யீர்திரு நீறுமிட்டுக் கையும் தொழப்பண்ணி அஞ்செழுத் தோதவும் கற்பியுமே'' என்று பெருமானிடம் விண்ணப்பித்துக் கொள்ளுவதை இங்கே நினைவு கூர்தல் வேண்டும்.

வேத சிவாகமங்களின் முடிந்த முடிபை விளக்குகிற சிவஞான போதம் சிவப் பேற்றுக்குரிய சாதனம் திருவைந்தெழுத்தை விதிப்படி ஓதுவதொன்றே என்று அறுதியிட்டுக் கூறியருளியது. ஏனைய சிவப் பணிகள் அனைத்தும் இத்திருவைந்தெழுத்தோதுதலை அடிப் படையாகக் கொண்டே செய்யக் கடவனவாதலின் இதற்கு ஒப்பா னதும் மிக்கானதுமான வேறு சாதனம் எதுவும் இல்லை. ''விதி எண்ணும் அஞ்செழுத்தும்; பாசம் ஒருவத் தண்ணிழல் ஆம் பதி'' என்பதே சிவஞான போத அருளிப்பாடு. ஆணவம், கன்மம், மாயை யாகிய மும்மலங்களையும் உடைய சகல வருக்கத்து உயிர்களாகிய நம்மனையவருக்குச் சிவபெருமான் நம்போன்ற மானிடவடிவம் கொண்ட ஆசாரியரை நிலைக்களமாகக் கொண்டு எழுந்தருளி வந்து பக்குவம் பார்த்துத் திருவைந்தெழுத்தை உபதேசிப்பாரென்று ஞான நூல்கள் கூறுகின்றன. இந்தப் பொது விதிக்கு அப்பாற்பட்ட சிறப்பு விதியாகக் காசித் திருத்தலத்தில் உடம்பை விட்டுப் பிரிகின்ற எல்லா உயிர்களுக்கும் தாமே நேரில் எழுந்தருளி வந்து திருவைந்தெழுத்தை உபதேசித்துச் சிவப்பேற்றை விசுவேசர் வழங்குகிறாரென்றால் இந்தத் திருத்தலத்திற்கு இணை இதுவொன்றே என்பதில் ஐயமுண்டோ?

பரசிவ வாக்காகிய வேதத்தின் நடுவில் விளங்குவது திருவைந் தெழுத்து. திருவைந்தெழுத்தின் பேரொளியினாலேயே வேத மந்திரங் களெல்லாம் ஒளி வீசிக் கொண்டிருக்கின்றன. இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என வேதங்கள் நான்காகச் சொல்லப் பெறுவனவாயினும் அதர்வண வேதம் மற்ற மூன்று வேதங்களுள் அடங்குமாதலின் ''வேதத்திரயீ'' என்று, வேதங்களை மூன்றாகச் சொல்லுவதும் ஒரு

மரபாகும். வேதங்கள் மூன்றனுள் நடுவணதாகிய யசுர் பன்னிரண்டு காண்டங்களாகப் பிரிந்து எண்பத்திரண்டு பிரச்னங்கள் உடையதாய் மாந்த்ரமெனவும் ப்ராம்மணமெனவும் இருவகைப்பட்டு விளங்கும். இவற்றில் மாந்த்ரமாகிய சம்மிதா பாகம் ஏழு காண்டங்களை உடையது. அவ்வேழனுள் நடுவணதாகிய நான்காவது காண்டத்தின் நடுவில் ஸ்ரீ ருத்ராத்யாயம் என்னும் சதருத்ரீய மகாமந்திரம் ஒளிர்கின்றது. அதன் நடுவில் ''நமஸ் ஸோமாயச ருத்ராயச்'' என்று தொடங்கும் அநுவாகத்தில் ''நமசிவாயச சிவதராயச'' எனத் திருவைந்தெழுத்து தலைமைத் தன்மை பூண்டு விளங்கிக் கொண்டிருக்கிறது, என்பதும் சதருத்ரீயத்தில் சிவபெருமானுக்குச் சொல்லப் பெறுகிற முந்நூற்றெருரு திரு நாமங்களுள் நூற்றைம்பத்தொன்ரு வதாகிய நடுத் திருநாமம் திருவைந்தெழுத்தென்பதும் அறியத் தக்கனவாம்.

வேத மந்திரங்கள் முன்னும் பின்னும் பிரணவமாகிய சம்புடம் அமைய ஓதப் பெறுவதனுலேயே பயனை வழங்கிக் கொண்டிருக்கின்றன. பிரணவமும் திருவைந்தெழுத்தும் ஒன்றினென்று வேறு பட்டனவல்ல. பிரணவமே திருவைந்தெழுத்து. திருவைந்தெழுத்தே பிரணவம். இதனை வேறு துணை வேண்டாதும் பிரணவம் ஓதப் பெறுவது போலத் திருவைந்தெழுத்தும் வேறு துணையின்றியும் ஓதப் பெறுவது கொண்டு தெரிந்து கொள்ளலாம். எந்த ஒரு மந்திரமும் பிரணவத்தின் துணையின்றி ஓதுவார்க்குப் பயன் தருவதில்லை. திருவைந்தெழுத்து மட்டும் பிரணவத்தின் துணையின்றி ஓதுவாருக்கும் பயனை வழங்க வல்லது.

வேத உடன்பாடுடைய எல்லாச் சமயத்தினரும் பிரணவத்தை ஏற்றுக்கொண்டு அதனைத் தாரகமந்திரமென்று பாராட்டுவர். என்ருலும் அந்தப் பிரணவ மந்திரமேயாகிய திருவைந்தெழுத்தைத் தாரகமந்திரமனெ அவர்கள் அறிந்தார்களில்லை. வேத இருதயத்தில் விளங்கிக் கொண்டிருப்பதனுலும் எல்லா மந்திரங்களுக்கும் முதலாயும் மூலமாயும் திகழ்வதனுலும் பரம்பொருளாகிய சிவ பெருமானை அறிவதற்கும் அடைவதற்கும் ஆதாரமாய் இருப்பதனுலும் சிவமூலமாகிய திருவைந்தெழுத்து, தாரக மந்திரமாக இருந்து பயன் வழங்கிக் கொண்டிருக்கிறது.

சேர்ந்திருக்கும்பொழுது ஓர் எழுத்தாகவுள்ள பிரணவம், பிரிந்திருக்கும் பொழுது அகரம், உகரம், மகரம், விந்து, நாதங்களாகிய ஐந்தாகி நிற்கும், ''அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே, மகாரம் ருத்ரம் ப்ருமத்யே ஓங்காரம் சர்வேச்வரம் ர்வாதசாந்தே'' என்பது நரசிம்ம தாபநீய உபநிடதம். இதனுல் அகர உகர மகரங்களில் பிரமன் திருமால் உருத்திர ராதியமும் மூர்த்திகளும் இருக்க, அம் மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டுப் பிரணவப்பொருளாகச் சருவேசுரராகிய சிவபெருமான் விளங்குகிருரென்பது அறியப் பெறுகின்றது. ஓர் எழுத்தாகிய பிரணவம் அகாரம் முதலிய ஐந்து கலைகளாயிருப்பது போலத் திருவைந்தெழுத்தும் ஐந்து கலைகளாகிய ஐந்து எழுத்துக்களைக் கொண்டிருக்கின்றது. பிரணவப்பெருளாகச் சிவபெருமான் விளங்குவதைப் போலத் திருவைந்தெழுத்தின் பொருளாகவும் அவர் விளங்கிக் கொண்டிருக்கிருர். திருவைந்தெழுத்திலுள்ள எழுத்துக்களின்

பொருளை "சிகாரம் சிவரூபந்து நகாரம் சக்திருச்யதே, யகாரம் ஆத்ம ரூபஞ்ச நகாரம் க்ரர்திருபகம், மகாரம் மலரூபஞ்ச இத்யர்த்தப் பஞ்சவர்ணக;" என்று சிவாகமம் அருளுகின்றது.

நான்கு வேதங்களின் உண்மைப் பொருளாக விளங்குவது திருவைந்தெழுத்தென்பதை "வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது, நாதன் நாமம் நமச்சி வாயவே" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தால் அறிகின்றோம். வேதத்திரயீ என்று சொல்லப் பெறுகின்ற மூன்று வேதங்களுள் முதலாவதாகிய இருக்கு வேதத்தின் முதல் மண்டலத்து முதற் சூக்கத்து முதல் மந்திரத்தின் முதலிலுள்ள "அக்கி மீளே" என்று தொடங்கும் மந்திரத்தின் முதலெழுத்தாகிய அகாரமும் இரண்டாவதாகிய யசுர் வேதத்தில் "யோநிஸ்ஸமுத்ரோ பந்து" என்னும் மந்திரத்தின் நடுவெழுத்தாகிய உகாரமும் மூன்றாவதாகிய சாம வேதத்தின் இறுதியிலுள்ள "ஸமாநம் பரம்" என்னும் மந்திரத்தின் இறுதி எழுத்தாகிய மகாரமும் சேர்ந்து வேதங்கள் பிரணவ வடிவானவை என்பதைக் காட்டிக் கொண்டிருக்கின்றன. திருவைந்தெழுத்தும் பிரணவமும் ஒரு பொருளனவே என்பதை "ஓங்காரம் ஆமைந் தெழுத்தாற் புவனத்தை உண்டு பண்ணிப், பாங்காய் நடத்தும் பொருளே அகண்ட பரசிவமே" என்ற தாயுமான அடிகள் திருவாக்கு தெள்ளத் தெளிய அறிவிக்கின்றது.

பிரணவம் பிரிந்திருக்கும் பொழுது அகர உகர மகரமாகிய ஓங்கார மாகிச் சிவப்பிரணவமென்றும் உகர மகர அகரமாகிய உமா ஆரிச் சத்திப் பிரணவமென்றும் சொல்லப் பெறும். ஓங்காரம் நாத விந்து வடிவமாதலின் சொற்கூறு, பொருட்கூறு ஆகிய உலகம் முழுவதும் அதனுள்ளே அடங்கியிருக்கும். இதுபோலவே சிவம், சத்தி, உயிர், திரோதம், மலம் ஆகிய எல்லாம் திருவைந்தெழுத்தினுள் இருப்பது கொண்டு பிரணவமும் திருவைந்தெழுத்தும் தம்முள் ஒன்றே என்பது, தெளிந்து கொள்ளத் தக்கது. இங்ஙனம் தம்முள் எவ்வாற்றானும் வேற்றுமைப் படாத பிரணவமும் பஞ்சாட்சரமும் தாரக மந்திரமென்று குறித்தற்குரியன வாயிருப்பதனாலேயே காசித் திருத்தலத்தில் விசுவேசர் உபதேசிக்கும் மந்திரத்தைப் பற்றிக் கூறும் நூல்களில் தாரகமெனவும் பஞ்சாட்சரமெனவும் அம்மந்திரம் குறிக்கப் பெறுவதாயிற்று.

திருவைந்தெழுத்தை உபதேச வாயிலாகப் பெறுவதற்குரிய பக்குவம், சத்திரிபாதம் உற்றவர்களுக்கே உண்டு என்று நமது ஞான நூல்கள் கூறுகின்றன. சத்திரிபாதம் என்பது "திருவருட்சத்தி தோய்தல்" என்னும் பொருளை உடையது. இயங்கிக் கொண்டிருக்கிற எல்லா உயிர்களும் சிவசத்தியின் இயக்குவித்தலை மூலமாகக் கொண்டே எவ்வேளையிலும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. இதனாலேயே உயிர்களைச் சுதந்தரம் இல்லாதனவென்றும் பரதந்திரம் உடையனவென்றும் அருள் நூல்கள் கூறுகின்றன. உயிர்கள் செய்த வினைக்கீடாக அவற்றை உலகியலிற் செலுத்தி இன்ப துன்ப நுகர்ச்சிகளில் ஈடுபடும்படி செய்கின்ற பொழுது சிவசத்தி, திரோதான சத்தி என்னும் பெயருடன் தொழிற்படும். உலகியல் இன்ப துன்பங்களை நுகர்ந்து பல்காலும் உழன்ற உயிர் பல கோடிப் பிறப்புக்களில் செய்த சிவபுண்ணிய மிகுதியினால் நல்வினைப் பயனாகிய இன்பத்தை நுகரும் பொழுது மகிழ்ச்சியும் தீவினைப் பயனாகிய துன்பத்தை நுகரும் பொழுது வருத்தமும் இன்றியிருப்பதால் நிகழும் இருவினையொப்பை

அடைந்து அதனுல் அநாதியே கட்டுப்படுத்தி நின்ற ஆணவமலம் பரிபாகமாக அந்த வேளேயில் திரோதான சத்தியாக இருந்து அது வரை கீழ் நிலேகளிற் செலுத்தி வந்த சிவசத்தி அருட்சத்தியாக மாறித் திருவருட் குறிப்பை வழங்கச் சிவப்பேறு பெறுதற்குரிய நெறியில் தலேப்படும். அங்ஙனம் திரோதானசத்தி திருவருட் சத்தியாக மாறி அருள்புரிவதே ''சத்திநி பாதம்'' என்று சொல்லப்பெறுவது.

ஆணவமல வலிமை முற்றிலும் கெட்டு மிக விரைவிற் சிவப்பேறு பெறும் தகுதியை அடைந்த உயிருக்கு திருவருட் சத்தியின் தோய்வு நேராக வந்து கைகூடும். அந்த வேளேயில் சிவபெருமான் அவ்வுயிருக்கு முன்னிலேயாகி உபதேசம் புரிந்து ஆட்கொள்ளுவார். இந்த வகையில் காரைக்காலம்மையாருக்கு நேரே முன்னிலேயில் சத்திநி பாதப்பேறு சித்தித்ததென்பதை அவர் தலேயினுல் நடந்து வெள்ளி மலேயினில் ஏறும்போது முதலில் ''சிலே நுதல் இமய வல்லி திருக்கண் நோக்கு உற்றது'' என்று சேக்கிழார் பெருமான் அருளுவதால் அறியலாம். காசித் திருத்தலத்தில் உடல்விடும் பெரும் பேறு தீவிரதர சத்திநி பாதத் தகுதி உடையாருக்கே கிட்டுவதாகும். அதனுலேயே விசாலாட்சி அம்மையார் முன்னிருந்து தமது முன்ருனேயால் வீச விசுவேசர் தமது வலது தொடையில் கிடத்தித் திருவைந்தெழுத்தை நேராக உபதேசிக்கும் வாய்ப்பு காசியில் உடலே விடுபவர்களுக்குக் கிடைத்து விடுகிறது.

சிவசத்தி நேரே முன்னின்று தோய்வுறுதலும் சிவபெருமான் நேரே முன்னிலேப்பட்டுத் திருவைந்தெழுத்தை உபதேசித்தலும் மற்ற இடங்களில் பெருந்தகுதி வாய்ந்த மெய்ஞ்ஞானியர் சிலருக்கு நிகழ்ந் ததும் நிகழ்வதும் உண்டு. ஆனுல் உடல் விடும் உயிர்கள் எல்லா வற்றிற்கும் விசாலட்சியம்மையாரும் விசுவேசரும் முன்னிலேப்பட்டுச் சிவப்பேறு வழங்குவதென்பது காசித் திருத்தலம் ஒன்றற்கே சிறப்பாய் அமைந்ததென்ருல் இத்திருத்தலத்தின் பெருமையை எங்ஙனம் அளவிட்டுச் சொல்ல முடியும்? இங்கே சிவசத்தி விசாலட்சி என்ற பெயருடன் பெருந் தடங்கண்ணியாக விளங்கிக் கொண்டிருக்கிருள். துவாதசாந்தத் திருத்தலமாகிய மதுரையம்பதியில் மீனுட்சி என்னும் திருப்பெயருடன் எழுந்தருளியிருந்து எல்லா உயிர்களேயும் தனது கடைக் கண்ணேக்கத்தால் உய்தியிற் செலுத்திக் கொண்டிருக்கிற சிவசத்தி, முத்தித் திருத்தலமாகிய காசியம்பதியில் விசாலாட்சி என்னும் திருப்பெயருடன் எழுந்தருளியிருந்து எல்லா உயிர்களுக்கும் சத்திநிபாதப் பேற்றை வழங்கியருளுகிருள். பக்குவத்தாற் குறை யுடைய உயிர்களேயும் பக்குவப்படுத்தி யாவரையும் ஒப்ப நோக்கி அருள் வழங்கும் வண்மையை ''விசாலாட்சி'' என்னும் திருப்பெயர் விளக்கிக் கொண்டிருக்கிறது.

விசுவேசர் என்பது எல்லா உலகங்களுக்கும் இறைவர் என்னும் பொருளேயுடையது. சிவபெருமான் ஒருவரே அகில உலகங்களுக்கும் தலேமைக் கடவுள். வேதம் சிவபெருமானே விசுவாதிகர், விசுவ காரணர், விசுவாந்தரியாமி, விசுவரூபர் என்பன வாதியாகப் பற்பல திருப் பெயர்களேக் கூறித் துதிக்கும். விசுவாதிகர்—உலகத்தைக் கடந்தவர். விசுவகாரணர்—உலகத் தோற்ற ஒடுக்கங்களுக்கு நிமித்த காரணமாயிருப்பவர். விசுவாந்தரியாமி—உலகத்திற்கு உயிராயிருந்து அதனே இயக்குபவர். விசுவரூபர்—உலகமாக இருப்பவர். இறைவனுக்

குள்ள இருவகை யியல்புகளில் ஒன்று சொரூபம். மற்றொன்று தடத்தம். சொரூபமென்பது இயற்கையாயுள்ள தன்னிலை. தடத்த மென்பது, தொழிற்பாட்டை மேற்கொண்டிருக்கும் நிலை. சொரூப நிலையில் விசுவாதிகராயிருக்கும் சிவபெருமான், தடத்த நிலையில் விசுவகாரணர், விசுவாந்தரியாமி, விசுவரூபராக இருந்து உயிர்களுக்கு அருள் புரிகின்றார். இதனை ''உலகினை இறந்து நின்ற தரனுரு என்ப தோரார், உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார், உலகினுக் குயிரும் ஆகி உலகுமாய் நின்ற தோரார், உலகினில் ஒருவன் என்பார் உருவினை உணரார் எல்லாம்'' என்ற சிவஞான சித்தித் திருவிருத்தத்தால் அறியலாம்.

எல்லா உயிர்களையும் ஒப்ப நோக்கிச் சத்திநிபாதத்தை அருளு கின்ற பெருந்தடங்கண்ணியைப் போல எல்லா உயிர்களையும் பக்குவப் படுத்திச் சிவப்பேற்றை வழங்குகின்ற சிவபெருமானும் காசித் திருத்தலத்தில் விசுவேசர் என்னும் திருநாமத்தைக் கொண்டு அகில லோக நாயகராக விளங்கிக் கொண்டிருக்கிறார். விசுவேசரது அருட்சத்தியாக விசாலாட்சி அம்மையார் விளங்குவதைக் குமரகுருபர சுவாமிகள் தமது காசிக் கலம்பகத்தில் ''செந்தேன் ஒழுகும் எழிற் காசி சிறுநுண் ணுசுப்பிற் பெருந்தடங்கண், பைந்தேன் ஒழுகும் இடப்பாகர்'' என்று கூறி மகிழுகின்றார்கள்.

காசித் திருத்தலம், தன்னகத்தே எழுந்தருளியுள்ள விசாலாட்சி யும் விசுவேசரும் வந்தடுத்த எல்லா உயிர்களையும் பக்குவப்படுத்தி முத்திப்பேற்றை வழங்குவதால் மூர்த்திச் சிறப்பும் எந்த உயிருக்கும் எம தண்டனையின்மை முதலிய பெருமைகளைக் கொண்டுள்ளதால் தலச் சிறப்பும் கண் கூடாக அறிகின்ற நிலையில் கடவுள் தன்மைகளைப் புலப்படுத்தும் கீர்த்திகளையுடைய கங்கையாறு பாய்வதால் தீர்த்தச் சிறப்பும் ஒருங்கே பெற்றுத் திகழுகின்றது.

ஒப்புயர்வற்றதாகவும் ஒளிர்கின்ற இக்காசித் திருத்தலத்தில் மகுடதன வைசியர்களாகிய நாட்டுக் கோட்டை நகரத்தார்களுக்குச் செய்யக் கிடைத்துள்ள சிவப்பணி, யாருக்கும் கிடைக்கக் கிட்டாத ஏற்ற முடையதாகும். விசுவேசருக்கு நிகழும் நான்கு கால நாட்பூசை யில் மூன்று கால பூசை நாரத்தார்களால் செய்விக்கப் பெறுவதையும் விசாலாட்சியம்மையார் திருக்கோயில், நகரத்தார்களால் திருப்பணி செய்விக்கப் பெற்று நாட்பூசை சிறப்புப் பூசை முதலியன சிறப்பாக நடத்துவிக்கப் பெறுவதையும் யாவரும் அறிவர். சிவபுண்ணிய சீலர் களாகிய நகரத்தார்களுக்குப் பெருந்தடங்கண்ணியின் திருவருள் நோக்கத்தாலும் விசுவேசரது அருட்கருணையாலும் எந்நாளும் துன்பமே இல்லாத இன்பமே நிகழ வேண்டுமென்று பிரார்த்திப் போமாக.

நலமே தழைக



# மதுரை மீனுட்சி

தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே, நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகும் நறும்
சுவையே! அகந்தைக் கிழங்கை, அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே, வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமின் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பாத்திருக்கும்
உயிர்ஓ வியமே, மதுகரம் வாய்
மடுக்கும் குழற்காடு ஏந்தும் இள
வஞ்சிக் கொடியே வருகவே;
மலையத் துவசன் பெற்ற பெரு
வாழ்வே, வருக, வருகவே !

என்று மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடுகிறது. பாடியவர் காசித் தலத்தில் பெரும் புகழ் பெற்று, அத்தலத்தைப் பற்றிய இலக்கியங்கள் பலவற்றைப் படைத்த குமர குருபரர். நாட்டுப் பாடல்களிலும் மீனுட்சி அம்மையின் பெருமை பேசப்படுகிறது. இதோ ஒரு சான்று ;

வெள்ளிமலை விராலிமலை
விறகெடுக்கும் நாகமலை
பஞ்சம் தாங்கும் மதுரைக் கோட்டை
படிபோடும் மீனுட்சி.

மதுரையின் சிறப்பை, ஒரு பாடல் பின்வருமாறு கூறுகிறது.

' மங்கையரில் மீனாட்சி
மாப்பிள்ளையில் சொக்கலிங்கம்
பொங்குமிகும் இலையழகில்
பொற்றாமரை வாவி
சங்கத் தமிழ் மணக்கும்
சதுர நிலைக் கோபுரமும்
எங்கள் மதுரைக் கிணையாய்
இன்னொரு ஊர் இல்லையடா !

தலைசிறந்த எழுத்தாளராகிய சாமர்சட்மாம் Razor's Edge என்னும் தம் இணையற்ற படைப்பில் மீனாட்சி கோயில் இந்துக் களின் உயிர்நாடியான கொள்கைகளை உணர்த்த வல்லது என்று தம் மதுரைப் பயணத்தினை ஆதாரமாகக் கொண்டு எழுதியிருக் கிறார்.

மீனாட்சியம்மனுக்கே இக்கோயிலில் முதன்மை உண்டு. கோவிலே அவள் பெயரால் தான் வழங்குகிறது. மதுரை மாநகர்க்கு மீனாட்சி பட்டினம் என்றும் பெயருண்டு. இறை வனின் திருமணம் மீனாட்சி கல்யாணம் என்றே இந்நகரில் குறிப் பிடப்படுகிறது. மதுரையின் பெரிய திருவிழாவாகிய சித்திரை விழாவின், முக்கிய நிகழ்ச்சி இம் மணச் சடங்கே. வலக்கையில் கிளியுடன் கூடிய ஒரு செண்டு ஏந்தி மீனாட்சிம்மன் நிற்கின்ற கோலம் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் தன்மையது. கருணை பொழியும் கண்களை இமையாது மக்களைக் காக்கும் அருள் உடையவள் அன்னை மீனாட்சி; தடாதகை, அங்கயற் கண்ணி என்றெல்லாம் பல பெயர்களை உடையவள். பாண்டிய அரசர் மட்டுமின்றி, வெள்ளைக்கார 'கலெக்டர்' துரைகளும் அன்னை மீனாட்சியின் அருளை உணர்ந்து அணிகலன்களை அள்ளி வழங்கி யுள்ளனர்.

விசாலாட்சியும் காமாட்சியும் கோவில் கொண்டுள்ள நகர் களைப் போலவே, மீனாட்சி பட்டினமாகிய மதுரையும் பெண் களின் ஆடைக்கலைக்குப் புகழ்பெற்றது. காசிக்குப் போய்க் கங்கையில் நீராடாமல் வந்தாலும் வருவரே தவிர, பெண்கள் காசிப் பட்டாடை வாங்காமல் வரமாட்டார்கள். காஞ்சியில் சென்று காலாட்டிக் கொண்டு வாழலாம் என்று சொல்லும் அளவுக்கு நெசவுத் தொழிலால் ஏற்றம் பெற்றது காமாட்சி பட்டினம். திருமண நாள் முடிவாகிவிட்டால் காஞ்சிக்குச் சென்று சேலைகளை வாங்குவது வழக்கமாகிவிட்டது. மதுரைமா நகரும் இவ்வாறே சிலவகை நெசவுத் துறைகளில் சிறந்து

விளங்குகிறது. தையற் கலையிலும் மதுரை புகழ் பெற்றது. தையற்கடைகளைத் தொகுப்பாகக் காணக்கூடிய இடம் மதுரைப் புதுமண்டபம். மகளிரின் நகைப்பித்து நாடறிந்தது. சிலப்பதிகாரக் காலத்திலேயே, காற்சிலம்பை விற்க விரும்பிய கண்ணகி, நகை வாணிகச் சிறப்புடைய மதுரை நகருக்குக் கோவலனுடன் எழுந்தருளினாள். இன்றும் தங்கம் முதலியவற்றில் நகைகளைச் செய்யும் தொழிலில் மதுரை தலைமையிடம் வகிக்கிறது.

ஆடை, நகை ஆகியவற்றுக்கு அடுத்தபடி மங்கையர் விரும்புவது மணம் நிறைந்த மலர்கள். அவற்றைப் பயிரிடுவதிலும் மதுரையின் சுற்றுப்புறம் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டுள்ளது. இந்தியாவெங்கும் மதுரை ஆகாய விமான நிலையத்திலிருந்து மலர்கள் அனுப்பப்படுகின்றன.

மீனாட்சி கோவில் திருப்பணியில் நகரத்தார் பங்கு பெரிது. மீனாட்சியிடம் ஈடுபாடுடைய நகரத்தார் காசியில் கேதார நாதர் கோவிலில் மீனாட்சி சந்நிதி நிறுவியுள்ளனர்.

அன்னை விசாலாட்சிக்குப் புதுத் திருவுருவம் நிலைநாட்டி மகிழும் இந்நாளில், மதுரை மீனாட்சியையும் நினைத்து அவள் அருளை வேண்டுவோம்.

# விசாலாட்சி கோவில்

காசியில் விசாலாட்சி கோவில், விசாலாட்சி கட்டம் என இப்போது வழங்கும் பகுதியில் கங்கைக் கரையருகே குறுகிய தெரு வொன்றில் உள்ளது. முன்னாளில் இப்பகுதி மீர்காட் என்ற பெயரில் வழங்கி வந்ததாகத் தெரிகிறது.

காலம் : காசியில் அன்ன பூரணிக்குக் கோவில் ஏற்பட்டது பதினேழாம் நூற்றாண்டில் தான் என்று கூறுகின்றனர். விசாலாட்சி அம்மனுக்கும் அக்காலத்திலேயே கோவில் உண்டாகியிருக்கக்கூடும். அப்போது கட்டப்பெற்ற கோவில், மிகச்சிறு அளவில், பண்டாக்களின் தனிச் சொத்தாக அமைந்திருந்தது.

நகரத்தார் தொடர்பு : விசாலாட்சி கோவிலைப் புதுப்பிக்கவும், விரிவாகக் கட்டவும் கல்கத்தா நகரத்தார் விரும்பினர். அதற்கு, கோவிலின் இடப்பரப்புப் போதியதாக இல்லை. எனவே அக் கோவிலருகே காசி மஹாராஜா அவர்களின் இடத்தையும் கோவிலுக்குப் பெற அவர்கள் 1890 அளவில் விரும்பினார்கள். அந்த மன்னர் உடனே இசைந்து, தம் இடத்தை நகரத்தார் களுக்கு "தரும சாசனமாக" பதிந்து கொடுத்தார். இதன்பிறகு திருப்பணி வேலையை நகரத்தார் தொடங்கினர். திருப்பணிக் காக அந்நாளிலே ஒரு லட்சம் ரூபாய் செலவிட்டனர் என்று தெரிகிறது. இன்றைய விலை நிலையில் இது பதினைந்து லட்சம் ரூபாய்க்குச் சமமாகும். 1893-இல் கோவில் கட்டி முடிக்கப் பெற்றது. 1908-இல் வெள்ளித் திருவாசி செய்யப்பெற்றது. திருமாங்கல்யம், மகரி, பதக்கம் முதலியனவும் செய்யப் பெற்றன.

1934-இல் நிர்வாகம் இரங்கூனுக்கு மாறிற்று. விசாலாட்சி கோவில் திருப்பணிக்கு சுபகிருது ஆண்டு தை, மாசி, பங்குனி சோபகிருதுஆண்டு சித்திரை மாதங்களில் இரங்கூனிலும் பர்மாவின் பிற பகுதிகளிலும் நன்கொடை வசூலிக்கப்பெற்றது.

பண்டாக்கள் ; இக் கோவிலில் பூசைகளை நடத்தும் உரிமைகளை நகரத்தார் காசி பிராமணராகிய பண்டாக்களிடமிருந்து எழுத்து மூலம் பெற்றுள்ளனர். இதன் பயனாக, கோவில் தமிழ் நாட்டு ஆசாரப்படி நடைபெற்று வருகிறது. அதன் ஆட்சி நகரத்தாரிடம் இருந்து வருகிறது. திருவனந்தலைப் பண்டாக் களே இன்றும் செய்து வருகின்றனர். அந்த ஒரு காலத்துக் குரிய நிவேதனம் மிட்டாய் (சர்க்கரை). தாம்பாள வருமானத்

த்தையும் நகரச்சத்திரத் தொடர்பில்லாமல் நேரடியாகச் செய்யப்படும் அபிடேகங்களின் வருவாயையும் அவர்களே அடைகின்றனர்.

பண்டாக்களின் வீடுகளை, கல்கத்தா நகரத்தார் விலைக்கு வாங்கிப் பத்திரம் பதிந்துள்ளனர். அவர்களே அவற்றில் தொடர்ந்து குடியிருந்து வரவும் இசைவு வழங்கியுள்ளனர்.

திருவுருவங்கள் : மூலவராகிய விசாலாட்சி தவிர, உற்சவ விசாலாட்சி, தங்கத்தினால் முலாம்பூசிய சொர்ண விசாலாட்சி திருவுருவங்களும் உள்ளன.

விநாயகர், சிவலிங்கம், பாலதண்டாயுதபாணி, சண்டிகேசுவரி, நவக்கிரங்கள் ஆகிய திருவுருவங்களும் இக்கோவிலில் வைத்து வழிபடப் பெறுகின்றன.

அன்றாடப் பூசைகள் : நாள்தோறும் காலை 10-30 மணிக்கு காலைப் பூசையும், மாலை 6 மணிக்குச் சாயரட்சையும் நடைபெறுகின்றன. நகரத்தார்கள் நியமிக்கும் தமிழ் நாட்டுப் பிராமணர் இந்தப் பூசைகளைச் செய்து, சுத்த அன்னம் படைக்கின்றனர். ஒரு காலம் மட்டுமே அபிடேகம் உண்டு. அதற்கென நல்லெண்ணெய், பால், தயிர், தேன், பஞ்சாமிர்தம், பன்னீர் ஆகியவற்றுடன் பழுப்புச்சீனி, சந்தனம், திருநீறு, குங்குமம், அத்தர், பூ, நெய் விளக்கு ஆகியவையும் நகரச் சத்திரத்திலிருந்து அனுப்பி வருகின்றனர்.

மாலை 5 மணிக்கு, ஒரு சாஸ்திரிகள் நாள் தோறும் தேவி மகாத்மியப் பாராயணம் செய்விக்கிறார்.

இன்னிசை : செவ்வாய்க்கிழமைகளிலும் வெள்ளிக் கிழமைகளிலும் சாயரட்சைப் பூசையில் மேளம் வாசிக்கப் பெறுகிறது. திருவிழாக்காலங்களிலும் மேளம் முழங்குகிறது.

சிறப்பு அர்ச்சனைகள் : ஆடி, தை மாதங்களில் வெள்ளிக் கிழமைகளில் விசாலாட்சி அம்மனுக்குச் சகஸ்ர நாம அர்ச்சனை செய்யப்படுகிறது. மகாசிவராத்திரியன்று நான்கு கால அபிடேகம் நிகழ்கிறது:

திருவிழாக்கள் : உற்சவ மூர்த்தியாகிய விசாலாட்சி அம்மனுக்குப் பௌர்ணமி தோறும் அபிடேகம் உண்டு.

நவராத்திரி விழா, இக்கோயிலில் பெருஞ் சிறப்புடன் கொண்டாடப் படுகிறது, 10 நாட்களும், அம்மனுக்கு வெள்ளி அங்கியும், தங்கக்கவசமும் அணிவிக்கப் பெறும். சகஸ்ரநாம அர்ச்சனை செய்யப்படும். கோயிலுக்கு வருபவர்களுக்குச் சுண்டல் வழங்கப் பெறும். மகார் நோன்பு எனப்படும் விஜய தசமி நாளில் மூலத்தானத்தில் தங்க விசாலாட்சி எழுந்தருளிக் கையில் ரத்ன வேலாயுதம் ஏந்தியிருக்கும். உற்சவ விசாலாட்சி குதிரை வாகனத்தில் அமர்ந்து அம்பு எய்வது வழக்கம். காசிமா

## புண்ணியம் இருவகை

| 10 பைசா | ரூ. 1-25 |
|---|---|
| கங்கைப் படித்துறைகளில் பசுவைக் கட்டிவைத்து, ஒரு கட்டுப் புல்லையும் சற்று தொலைவில் வைத்திருக்கிறார்கள். 10 காசு கொடுத்து, புல்லை வாங்கிப் பசுவுக்குக் கொடுத்து, புண்ணியம் பெறலாம். | கங்கைக் கரையில் கட்டி வைத்திருக்கும் பசுக்களின் வாலைத் தொட்டால், 'கோதானம்' செய்த புண்ணியம் கிட்டும். 1-25 கொடுத்தால் தான் வாலைத் தொட விடுவர்! |

நகர் வீதிகளில் வலம்வந்து அம்பு போடுவது வழக்கமாக இருந்தது. 1942-இல் கலங்களால் அந்த ஆண்டில் நகரில் உலாச் செல்லுவது கைவிடப்பெற்றுக் கோயிலுக்குள்ளேயே விழா நடந்தது. தொடர்ந்து இந்நிலையே நீடித்து வருகிறது.

விஜயதசமியன்று கோவிலுக்கு வருபவர்களுக்குச் சர்க்கரைப் பொங்கலும் வடையும் வழங்கப்பட்டு வருகின்றன.

தீபாவளியன்று தொடங்கி மூன்று நாட்களுக்குச் சொர்ண விசாலாட்சியை நகரச் சத்திரத்தில் கொண்டு வந்து அலங்கரித்து வைப்பது அண்மையில் வழக்கமாக இருந்து வருகிறது. இதற்குரிய பூசை முதலிய செலவுகளுக்காக வலையபட்டி அ. நா. நாகப்ப செட்டியார் அவர்கள் ஆண்டுதோறும் 101 ரூபாய் கொடுத்து வருகிறார்கள்.

குடமுழுக்கு : கடைசியாக 1908-இல், பிலவ ஆண்டு தை 25-இல் கும்பாபிடேகம் செய்து வைக்கப் பெற்றது. ஆற்றல் மிக்க இந்த அம்மனின் புதிய திருவுருவம் நிலைநாட்டப் பெறுவதுடன் திருப்பணி வேலையும் நடைபெற்றுக் குடமுழுக்கு விழாவும் இப்போது (1971) நிகழுகின்றது.

எங்கும் நிறைந்து பெருங்கருணை பொழிந்து அனைத்து உயிர்களையும் காக்கும் அன்னை விசாலாட்சியின் கனிந்த அருட் பார்வையில் உலக மக்கள் எல்லோரும் நலமெல்லாம் பெற்றுச் சீரும் சிறப்பும் அடைவார்களாக!

[1960 ஜனவரி முதல் 1963 மே வரை காசி நகரச்சத்திர ஏஜெண்டாக இருந்த நாட்டரசன்கோட்டை அ. பெரி. கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள், 1964 முதல் ஏஜெண்டாக இருந்துவரும் புதுவயல் வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியார் அவர்கள் ஆகிய இருவரும் பதிப்பாசிரியருக்கு அளித்த பேட்டிகளை ஆதாரமாகக் கொண்டு இக்குறிப்பு எழுதப்பெற்றது.]

# ஆனந்தவனத்தில் அன்னை நிலயங்கள்

டாக்டர் டி. பி. சித்தலிங்கம்

'காசியென் றுரைக்கக் காசியைக் காணக் காசியை நினைக்கவே முத்தி'—என்றெல்லாம் பெருமையுடன் பேசப்படும் காசி, இந்துக் களுக்கு—குறிப்பாகச் சைவர்களுக்கு—மிகவும் சிறப்பான தொன்றும். வாழ்நாளில் ஒரு முறையேனும் அத்திரு நகரைச் சென்று காண வேண்டுமென்று சைவர்கள் கருதுகிறார்கள். காசிக்குப் பெருமை சேர்ப்பன விசுவநாதர் கோவிலும் கங்கையாறும் ஆகும். காசி நகர எல்லைக்குள் இறந்தோரை இறைவி தன் முன்றானையால் வீசி இளைப்பாற்றுகிறாள். இறைவனே அவர்கள் காதில் பிரணவ மந்திர மோதி உய்விக்கிறான். காசியென்பதற்கே முத்தித்திருமகள் மிக்க ஒளி யுடன் நீங்காது வாழும் நகரம் என்பது பொருள். வாராணசி, மகாமயானம், கௌரி முகம், ஆனந்தகானம் (ஆனந்தவனம்), அவிமுத்தம், முதலிய பல்வேறு பெயர்கள் இந்நகருக்குண்டு. வாராணசியென்பதே ஆங்கிலேயர் காலத்தில் பனாரஸ் ஆயிற்று.

'அருளது சத்தியாகும் அரண்தனக்கு' என்று கூறுவது சைவம். இறைவனின் அருளே சத்தி வடிவமாய் விவங்குகிறது என்பது இதன் பொருள். இறையருளே மலம்நீக்கி முத்தி தருவது. அவ்வருள் அன்னை வடிவில் காசியில் நிலைகொண்டுள்ள இடங்களைக் காணபோம்.

1. அன்னபூரணி : 'காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி' என்பது தமிழ் நாட்டு வழக்கு. இதனைத் தென்னிந்தி யாவின் பிறமாநிலங்களிலும் கேட்கிறோம். என்னும் காசியிலும், வட இந்தியாவிலும் விசுவநாதரின் தேவியாக, காசிநகர்த் தலைவியாக, அன்னபூரணியையே குறிப்பிடுகிறார்கள்.

விசுவநாதர் கோயிலுக்கு அருகிலுள்ளது அன்னபூரணி கோவில். இறைவனுக்கே அன்னமிட்டவள் இத்தேவி. இத்திருக் கோலத்தைத் தீபாவளி நாளில் காணலாம். வட இந்திய உணவு வகைகள் அனைத்தும் அன்னையின் முன் படைக்கப்பட்டிருக்கும். (துளசி மானச மந்திர் என்னும் கோவிலில் அன்னை அன்னமிடும் காட்சியை எப்போதும் காணலாம்.)

நவராத்திரியில் எட்டாம் நாளன்று இந்தத் தேவியைச் சிறப்பாக வழிபடுவார்கள். வளர்பிறை அட்டமியில் இக்கோவிலை வலம் வருவது, காசிநகரை வலம் செய்த புண்ணியத்தையளிக்கும் என்று காசி கண்டம் முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கிறது.

### மாமியார் உடைத்தால் மண்சட்டி

காசியில் நெடுஞ்சாலைகளிலும் சந்துகளிலும் விசுவநாதர் கோவிலிலும் பசுக்கள் தங்கு தடையின்றித் திரிகின்றன.

காய்கறி, பழம் வியாபாரம் செய்யும் ஹிந்துக்கள் பசுக்களை விரட்டுகின்றனர். இவ்வாறு இவர்கள் விரட்டு வதை, ஒருவரும் குற்றமாகக் கருதுவதில்லை.

வேற்று சமயத்தினர் இவ்வாறு பசுக்களை விரட்டினுல், அச்சமயத்தினருக்கும் ஹிந்துக்களுக்கும் பெரிய அளவில் கலகங்கள் மூண்டுவிடும்!

ஆதி சங்கரர் 'அன்னபூர்ணுஷ்டகம்' இயற்றியது இத்தேவியின் மீதுதான்.

2. விசாலாட்சி : தென்னுட்டு வழக்குக் கேற்ப, காசியில் விசாலாட்சி சந்நிதி வேண்டுமென்று எண்ணி, நகரத்தார் அமைத் துள்ள கோவில். அழகொழுகும் திருமுகமுடைய வடிவம். நவராத் திரியில் சிறப்பாக பூசையும் விழாவும் உண்டு. பத்தாம் நாள் (விஜய தசமி) அன்னை வேட்டையாடும் காட்சியை இங்கே காணலாம். உற்சவ மூர்த்தியும் நவக்கிரகங்களும் இந்தக் கோவிலில் உள்ளன. இந்தத் தங்கத் திருவுருவை (விசாலாட்சி உற்சவர்) தீபாவளி நாளில் நகரத்தார் சத்திரத்தில் அலங்காரம் செய்து வைக்கிருர்கள்.

விசாலாட்சி கோவில் நகரத்தார் நிர்வாகத்தைச் சேர்ந்தது. இது, விசுவநாதர் கோவிலுக்கருகிலேயே உள்ளது.

3. துர்க்கை : காசியின் தென் எல்லையாகக் கருதப்படும் அஸ்ஸி நதிக்கருகே இக்கோவில் உள்ளது. நகரிலிருந்து காசி இந்துப் பல் கலைக்கழகம் செல்வதற்கான இருவழிகளுள் ஒன்றில் இதைக் காணலாம். வேண்டு வரம்தரும் சந்நிதி. நவராத்திரியில் நான்காம் நாள் இதனைத் தரிசிப்பர். இக்கோவிலில் பத்திரகாளி, இலட்சுமி, சரசுவதி சந்நிதிகளும் உண்டு. இங்கே குரங்குகள் மிகுதியாக உள்ளன. கோவிலை அடுத்துள்ள திருக்குளம் 'துர்க்கா குண்டம்' என வழங்கப்படுகிறது. பத்திரகாளி, தில்லையிலுள்ள எல்லைக்காளி போலத் தோற்றமளிக்கும்.

நவராத்திரியின்போது ஒவ்வொரு நாளும் ஒரொரு தேவியாக ஒன்பது தேவியரை இவ்வூர் மக்கள் சென்று வணங்குகிருர்கள். அக் கோவில்களாவன:

4. சைல புத்திரி (முதல் நாள்) : மலைமகள் என்பது இதன் பொருள். காசிக்கு எல்லை வகுக்கும் வருணைநதிக் கருகில், அலைபூர் என்னும் இரயில் நிலையத்துக்கருகே இக்கோயில் இருக்கிறது. இப் பகுதியில் முஸ்லிம்கள் மிகுதியாக வாழ்கின்றனர்.

5. பிரம்மசாரிணி (இரண்டாம் நாள்) : 'துர்க்கா காட்' எனும் பெயருடைய படித்துறைக்கருகே உள்ள கோவில்.

6. சித்திர கண்டா (மூன்றும் நாள்) : 'சௌக்' கடைத் தெருவுக் கருகே உள்ளது.

7. கூஷ்மாண்டா (நான்காம் நாள்) : துர்க்கையின் மற்றொரு பெயர். மேலே துர்க்கை பற்றிய பகுதியில் விவரம் காண்க.

8. ஸ்கந்த மாதா (ஐந்தாம் நாள்) : வாகீசுவரிதேவி என்றும் கூறுவார்கள். 'ஜைத்புரா' என்னும் பகுதியில் கோவில் உள்ளது. இங்கும் முஸ்லிம்களே அதிகமாய் வசிக்கிறார்கள்.

9 காத்தியாயினி (ஆறும் நாள்) : ஆத்மவிசுவேசுவரர் கோவிலில் ஒரு சுவரில் பதித்துள்ள திருவுருவம். அளவில் சிறியதாயினும் அழகுடையது. சங்கடாதேவி கோவிலுக்குப் பின்புறம் இதன் நுழைவாயில் இருக்கிறது.

10. காளராத்திரி (காளி ; ஏழாம் நாள்) : இது 'காளிகா கலி' யில் இருக்கிறது. (கலி—சந்து) விசுவநாதர் கோவிலிலிருந்து செல்லலாம். துர்க்கை கோவிலில் உள்ள பத்திரகாளியைப் போலவே இந்தத் திருவுருவும் அச்சம் தருவதாய் அமைந்துள்ளது.

11. அன்னபூரணி (எட்டாம் நாள்) : மேற்குறிப்பிற் காண்க.

12. சித்திதாத்திரி (ஒன்பதாம் நாள்) : சங்கடாதேவி கோவிலுக்கருகே உள்ளது. சித்தேசுவரி, சித்தி மாதா என்றும் வழங்குவர். கோவில் சிறியதாயினும் அழகும் தூய்மையும் உடையது. அமைதி மிக்கது. ஒரு மாடத்தில் தேவியின் திருவுருவம் அமைந்துள்ளது. கீழே, வெள்ளித் தொட்டியில் சிவலிங்கம் இருக்கிறது.

இக்கோவிலில் சந்திரகூபம் என்னும் கிணறு உண்டு. அதில் பார்த்தால் முகத்தின் நிழல் தெரியும். அடுத்து வரும் ஆறு மாதங்களுக்குள் இறக்க விருப்பவர்களின் நிழல் தெரியாது என்று கூறுகிறார்கள். 'புலாநலா' என்னுமிடத்திலிருந்தும் இங்குச் செல்லலாம்.

இவ்வனைவரும் நவராத்திரி தேவியர். வேறுபல சந்நிதிகளும் காசியில் இருக்கின்றன.

13. சங்கடாதேவி : சங்கடங்களை (துன்பங்களை)த் தொலைப்பவள், (கேட்ட வரம் தருபவள்) என்பது பொருள். சங்கடஹரண விநாயகர், சங்கடமோசன ஆஞ்சநேயர் என்னும் பெயர்களும் இப்பொருளையே தருகின்றன.

கம்பீரமான திருமுகம். பொதுவாக, மற்றத் தேவியர்களின் உடற்பகுதியைக் காண இயலாது. (விசாலாட்சியும் இவ்வாறே.) சங்கடாதேவியின் முழுத் திருவுருவத்தையும் திருவடிகளையும் காணலாம். வெள்ளிக்கிழமை சிறப்பான நாள். வேண்டியவற்றைக் கொடுக்கும் அன்னை.

உலகப் புகழ் பெற்ற ஷெனாய்க் கலைஞரான பிஸ்மில்லாகான் இத்தேவியை வழிபடுகிறார் என்று கூறுகிறார்கள்.

'சௌக்' பகுதியிலிருந்து சந்துகள் வழியே செல்ல வேண்டும். படகில் வந்தால் 'சங்கடா காட்'டில் இறங்கிப் படியேறித் தரிசிக் கலாம். இக்கோவிலிலும் உயிர்ப்பலி உண்டென்று கூறுவர்.

'சங்கடாஷ்டகம்' என்னும் நூல் இத்தேவியின் பெருமையை எடுத்துரைக்கிறது.

**14. விந்தியவாசினி :** சங்கடா தேவி கோவிலின் வாயிலுக் கெதிரில் உள்ளது.

காசியிலிருந்து 45கல் தொலேவில் விந்தியாசலம் என்னும் தலம் உண்டு. அங்குள்ள விந்தியவாசினியின் புகழ் தேவி பக்தர்கள் அனேவர்க்கும் தெரியும். அவ்வன்னேயின் மறுபதிப்பே இவ்விந்திய வாசினி என்பர்.

**15. அசானக் மா :** மா=அன்னே. 'அசானக்' என்பதற்கு அறி யாதவாறு, எதிர்பாராதவாறு என்பது பொருள். நாமறியாதவாறே நமக்கு நன்மை செய்பவள் என்பது இதன் கருத்தாயிருக்கலாம். இரட்டைப் பிள்ளேயார்களேப் போன்று இரட்டைத் தேவியர். இருவரும் ஒரே திசையை நோக்கவில்லே. ஒருவர் கிழக்கே நோக்க, மற்றவர் தெற்கு நோக்கியிருக்கிருர். அழகிய சிறு திருவுருவங்கள்.

சங்கடாதேவி கோவிலின் வாயிலருகே இச்சந்நிதி இருக்கிறது.

**16. சந்தோஷி மா:** சந்தோஷம்=திருப்தி. எளிதில் மனமகிழ்பவள் அல்லது எளிதில் மகிழ்ச்சி தருபவள் என்னும் கருத்தில் இவ்வாறு வழங்குகிருர்கள்.

பெண்களே மிகுதியாக வழிபடுகிருர்கள். வெள்ளிக்கிழமை சிறப்பான நாள். அன்று முழுவதும் உணவேயின்றியிருந்து வழி படுவர். உப்பு, புளி முதலியவற்றைத் தொடவும் கூடாது. பூசை முடித்த பிறகு சந்தோஷிமா வரலாற்றைப் படிக்கின்றனர். கோவிலிலும் ஒருவர் படிக்க, பலர் அவரைச் சூழ்ந்து, இருந்து

பனிகொள் வரையில் பிறந்த கொடி
பரனுரிடத்தில் வளர்ந்த கொடி
முனிவர் இமையோர் மகிழ அறம்
முப்பத்திரண்டும் வளர்ந்தருளும்
வனிதை, வடிவேலனேப் பயந்த
மடந்தை, மட்டு வார்குழலாள்
இனிய பதம்ஆம் இருபோதும்
தலேமேல் தரிப்பாம் இருபோதும்

— அதிவீர ராம பாண்டியர்
காசி கண்டம்

கேட்கிறார்கள். பெரும்பாலும் கன்னிப் பெண்கள் இவ்விரதத்தை மேற்கொள்கின்றனர். கடலை, வெல்லம் இரண்டும் நிவேதனப் பொருட்கள்.

சங்கடா தேவி கோவிலின் பின்புறத்தில் இச்சந்நிதி உள்ளது. இக்கோவிலுள் நுழைந்து ஆத்ம விசுவேசுவரரையும் காத்தியாயனி தேவியையும் தரிசிக்கலாம்.

17. பீதாம்பர் தேவி : சங்கடாதேவியின் கோவில் மதிலை ஒட்டி உள்ள ஒரு கோவில் பதினைந்து படிகளை ஏறிச் செல்ல வேண்டும். வழக்குகளில் வெற்றி தருபவளாக இத்தேவியை மக்கள் கருதுகிறார்கள்.

18. பகளா முகி : பகைவரை வெல்வதற்கு உதவி செய்பவள். பிறரை வசியம் செய்யவும் சித்திகள் பெறவும் இவ்வன்னை வழிபாடு உதவும் என்று மக்கள் நம்புகிறார்கள். (வங்காளத்தில் இத்தேவி உபசரணை மிகுதி.)

பகளா முகி, பீதாம்பர் தேவி இரண்டும் இரட்டைச் சந்நிதிகளாக ஒரே இடத்தில் இருக்கின்றன.

19. காமாச்சா தேவி: காமாச்சா என்னும் பகுதியில் உள்ள கோயில். 'படுக்பைரவ்' (வடுகபைரவர்=பிரம்மச்சாரி பைரவர்) கோவிலைக் கடந்து செல்ல வேண்டும்.

சாக்த மதத்தின் உயர் கடவுள் காமேசுவரி. காமேசுவரனுடன் கலந்தும், அவனையடக்கி உயர்ந்தும் இருப்பவள் காமேசுவரி. இவளையே காமாட்சி என்று அழைக்கிறோம். காமாட்சி சந்நிதி இந்தியாவில் இரு இடங்களில்தான் முதலில் இருந்தது. ஒன்று காஞ்சிபுரம். மற்றது அஸ்ஸாம் மாநிலத்தில். அங்குள்ளவர்கள் தமது மொழியின் இயல்புக்கேற்ப காமாட்சியை, 'காமாக்கியா' என்றழைப்பர்.

காசியில் எல்லாத் தெய்வங்களுக்கும் கோவில்கள் இருக்கின்றன. காமாட்சி தேவிக்கும் கோவில் வேண்டுமென் றெண்ணிப் பிற்காலத்தில் எழுப்பிய கோவில், இங்குள்ள மொழியின் இயல்புக் கேற்ப, 'காமாச்சா' எனப்பட்டது. இக்கோவில் உள்ள பகுதியும் காமாச்சா எனப்பெயர் பெற்றது.

வேண்டுவார் வேண்டுவது தரும் தேவி, இக்கோவிலிலும் விந்தியவாசினி சந்நிதி உண்டு.

20. சீதளா தேவி : தென்னாட்டில் மாரியம்மன், அம்மை நோயின் தேவதையாக விளங்குவதைப் போல, சீதளாதேவியை வடக்கே வாழ்பவர்கள் கொண்டிருக்கிறார்கள், இவ்வன்னையின் வாகனம் கழுதையாகும்.

சீதளா தேவிக்கென நான்கு கோவில்கள், தசாசுவமேத காட்டிலும் (படித்துறை), பைரவநாதர் கோவிலுக்கருகிலும், இராஜ மந்திர் பகுதியிலும், சித்தேசுவரி கோவிலுக்கருகிலும் இருக்கின்றன. கேதார கட்டத்தில், கௌரி சந்நிதிக்கு வெளியிலும் சீதளா தேவியின் திருவுருவைக் காணலாம். தசாசுவமேதத்தில் இருப்பதே சிறப்புடையது. தனிக்கோவில். விசாலமான மேடையின் மீது அமைந்துள்ளது. கங்கையில் வெள்ளம் பெருகும் போது இக்கோவில் மூழ்கி விடும். நீர் வடிந்த பிறகு வழிபாடு தொடரும்.

ஊரில் அம்மை நோய் பரவும்போது இவ்வன்னைக்குத் தயிர், பால் அபிடேகம் செய்வர்.

21. (கேதார)கௌரி : கேதார கட்டத்தில், கேதார நாதர் கோவிலில் உள்ள சந்நிதி. அழகிய திருவுரு. வெள்ளிக் கிழமைகளில் பூப்பாவாடை அணிவிப்பார்கள். அது கண் கொள்ளாக் காட்சி யாகும். தென்னாட்டு முறைப்படி பூசை. நின்ற திருமேனி. கேதாரநாதர் கோவில் திருப்பனந்தாள் மடத்து நிர்வாகத்தில் உள்ளது.

கேதார கட்டத்தில் கௌரி குண்டம் எனும் குளம் இருக்கிறது. அதில் மூழ்கி, கேதாரநாதரை வழிபடுவர். மழைநாளில் கங்கை வெள்ளம் அதை மூடிவிடும்.

கேதாரநாதர் கோவிலில் மீனாட்சி சந்நிதி உள்ளது. இதுவும் நகரத்தார் திருப்பணியாம்.

22. பவானி : 'பஞ்சக் குரோச யாத்திரை' என்பது காசி நகரைச் சுற்றி வலம் வருவது. 'நித்திய யாத்திரை' என்பது ஒவ்வொரு நாளும் வணங்க வேண்டிய முறை. பத்து இடங்களை வழி பட வேண்டும். அவையாவன : 1. விசுவேசுவரம். 2. மாதவம். (பிந்து மாதவர்). 3. துண்டி (விநாயகர்) 4. தண்டபாணி. 5. பைரவம். 6. வந்தே காசி. 7. குகா. (குகை) 8. கங்கை. 9. பவானி. 10. மணிகர்ணிகை.

பவானி யென்பது அன்னபூரணியையே குறிக்கும்.

23. லலிதா : விசுவநாதர் கோவிலிலிருந்து வெளிவந்து இடப் புறம் திரும்பிச் சென்றால் இக்கோவிலைக் காணலாம். கோவில் மிகச் சிறியது. பளிங்கில் அமைந்த திருவுருவம். சிறியதாயினும் அழகியது, சக்தி மிக்கது.

24. வாராகி : இது, விசலாட்சி கோவிலுக்குத் தெற்கே உள்ள கோவில். மீர் கட்டத்தில் நீராடிவிட்டுக் கரையேறி வந்தால் இக் கோயிலைக் காணலாம். சூரியன் உதிப்பதற்கு முன்பு பூசையும் வழி பாடும் நடைபெறுகிறது. தரை மட்டத்துக்குக் கீழே அம்மன் சிலை. உயரே தூக்கிய முகம். அச்ச மூட்டும் நிலையில் இருக்கிறது. கீழே இறங்கித் தரிசிக்க இயலாது. முன்பு அதை அவ மதித்து வந்தார் களாம். தேவி உக்கிரம் மிகுந்தவளாதலின் சிலர் உயிரிழக்க நேரிட் டது. எனவே கீழேயிறங்கி, தேவிக்கு நேரே நின்று தரிசிப்பதைத் தடைசெய்து விட்டார்கள். பார்வைக்குப் பயங்கரமாகத் தோற்ற மளித்தாலும் அன்பர்க்கு எளிதில் அருள் வழங்கும் திருமேனி. நின்ற நிலை. காலை ஆறுமணிக்குக் கோயிலை மூடிவிடுவார்கள். அடுத்த நாள் விடியலில் தான் மீண்டும் திறப்பார்கள். காஞ்சியிலும் காமாட்சி கோவ்லில் வாராகி சந்நிதி உண்டு. அது அமைதியானது.

25. வந்தே காசி : நித்திய யாத்திரைக் கோவில்களுள் ஒன்று. காலபைரவர் கோயிலுக்கு மேற்கே, ஒரு பெரிய ஆலமரமும் சிறு கோவிலும் இருக்கின்றன. இதனைக் காசிதேவி கோயில் என்றும் கூறுவார்கள். வாராணசி தேவி என்றும் பெயருண்டு. இவ்வன்னை யின் பெயரால்தான் இவ்வூர் வாராணசி என வழங்கப்படுகிறது என்பர்.

**26.** கௌடி தேவி : துர்க்கை கோவிலுக்கருகே ஒரு சேரியில் அமைந்துள்ள ஆலயம். காசி யாத்திரை செய்பவர்கள் காசியை விடடுப்புறப்படுவதற்கு முன்பு இக்கோவிலுக்குச் சென்று 'கௌடி' (சோழி) வாங்கிச் சந்நிதியில் இட்டு, "காசிக்கு வந்த பலன் எனக்கு, கௌடி பலன் உனக்கு" என்று சொல்லி, வணங்கிவிட்டு வருவார்கள். இதைச் செய்யாவிட்டால் காசியைத் தரிசித்த புண்ணியம் கிட்டாது என்பது நம்பிக்கை. இத்தேவியைக் 'கௌடி மாயி' என்றும் வழங்குவர்.

**27.** நகரேசுவரி : நாட்டுக் கோட்டை நகரத்தார் சத்திரத்தில், நகரேசுவரர் கோவிலில் உள்ள சந்நிதி தென்னுட்டுச் சிற்ப முறைப் படி அமைந்துள்ள அழகிய திருவுருவம். ஆகம முறைப்படி வழிபாடு நடைபெறுகிறது.

ஆனந்தவனமாகிய காசியில் அன்னையின் அருள் பூக்கும் நிலையங் கள் எத்தனையோ இருக்கின்றன. அவற்றுள் எனக்குத் தெரிந்த, நான் தரி த்த சந்நிதிகளைப் பற்றி மட்டுமே இக்கட்டுரையில் குறிப்பிட் டிருக்கிறேன்.

> "அன்னையெம் பார்வதி; அத்தருனம் சிவனே;
> மன்னுமுவுலகுமெம் மூராம்; உற்றுர்சிவ னடியாரே!"
> "அன்னையே பூரணி; என்றும் பூரணி; எம்சிவன் ஆருயிர் நீயே
> நின்னையே பார்வதி வேண்டினேன் ஞானமும் துறவும்நீ
> தரு வாயே."

---

## "அவளால் வந்த ஆக்கம்"

**சிவஞான சித்தியார்**

மதுரைமாநகரம் 2,000 ஆண்டுகளுக்குமுன்னே சீரும் சிறப்பும் உடையதாகத் திகழ்ந்தது. சோழர் தலைநகராக விளங்கிய உறையூரும், காவிரிப்பூம் பட்டினமும், சேரர் தலை நகராக அமைந்திருந்த வஞ்சியும் கருவூரும் இன்று சிற்றூர் களாக உள்ளன. ஆனுல் பாண்டியர் தலைநகரான மதுரையும் பல்லவர் தலைநகரான காஞ்சியும் மட்டுமே இன்னும் தம் பழம் பெருமை குன்றுமல் நின்று நிலவச் சிறந்து விளங்குகின் றன. மதுரையில் மீனுட்சி அம்மையும் காஞ்சியில் காமாட்சி அம்மையும் கோயில் கொண்டிருப்பதே இதற்குக் காரணம்.

# காசி

தி. சா. ராஜு

இந்துக்கள் சமய அறிவு பெற்ற நாளிலிருந்து இந்த நகரம் புனித மானதாகக் கருதப்பட்டு வருகிறது. இந்திய நாட்டிலுள்ள எல்லாப் புனிதத் தலங்களும் தங்களைக் காசியுடன் ஒப்பிட்டோ மிஞ்சிய தாகவோதான் குறிப்பிட்டு வருகின்றன. ஆனால் இவை அனைத்தின் தொகுப்பெண்ணிக்கை காசி என்றால் அது மிகையன்று.

'காசி நகர்ப் புலவர்', என்பது மகாகவி பாரதியின் வாக்கு. பாரதி தம் வாழ்நாளின் தொடக்கப் பகுதியை அங்கு கழித்தவர். அந்த நகரத்தின் சமய, அரசியல், இலக்கிய முத்திரைகள் அவர் மேல் மிக நன்றாகப் பதிந்துள்ளதை அவருடைய இரசிகர்கள் உணரலாம்.

காசியின் புனிதத்திற்குச் சிறப்பான காரணம் கங்கை ஆறு. எத்தனையோ அழுக்கையும், குப்பையையும் ஈன மனிதர்கள் இதில் கொண்டு வந்து சேர்த்தாலும் தன் தூய தன்மை கெடாமல் ஓடு கிறது இந்தப் புனித ஆறு. அதன் விளைவால் இந்த நகரமும் தெய்வத்தன்மை பெறுகிறது.

இது இந்துக்களின் புண்ணியத் தலமாகையால் இதன்மீது பல தாக்குதல்கள் நிகழ்ந்தன. மொகலாயர் ஆட்சியில் இதன் பெயரே முகம்மதாபாத் என்று மாறிற்று. விசுவநாதரின் தூய ஆலயத்தையே ஔரங்கசேப் இடித்துத் தள்ளினான். அதைப் புதுப்பித்துக் கட்டியவர் இந்தோர் ராணி அகல்யாபாய். பொன்கூரை வேய்ந்தவர் சீக்கிய மன்னர் ரஞ்சித் சிங். இன்றும் ஆலயத்தின் பிற்பகுதி பள்ளி வாசலாக விளங்கி வருகிறது.

காசி நகரத்தில் யாத்திரிகர்களுக்குப் பெரும் தொந்தரவு தருப வர்கள் பண்டாக்கள். நம்முடைய சமய அறிவின் துணைமை இத்தகைய ஞானசூனியர்களுடன் இருப்பது நமது தீயூழ். அண்ணல் காந்தியடிகளே ஒரு தடவை பண்டா ஒருவரிடம் சிக்கிக் கொண்டார். சுவைமிக்க அந்த நிகழ்ச்சியைச் சத்திய சோதனையில் விவரிக்கிறார் அண்ணல்.

விசுவநாதரை வழிபடச் சென்ற அடிகளை மிகவும் தொந்தரவு செய்தார் பண்டா ஒருவர். அடிகள் தட்சிணையாகக் காலணா கொடுத்தார். (பழைய காசு-இன்றைய ரூபாயின் கால் வீசம் பங்கு-என்றாலும் இன்றைய இருபத்தைந்து காசின் வாங்கும் சக்தி அன்று அதற்கிருந்தது.) சினங்கொண்ட பண்டா அண்ணலைச் சபித்து அதை வீசி எறிந்தார். அடிகள் சிக்கனம் மிக்க வணிகராயிற்றே! அவர் அதைப் பொறுக்கிக் கொண்டார். 'பாவி, இதை நான் பெற்றுக் கொள்ளாவிட்டால் நீ நரகத்துக்குப் போவாய்', என்று கூறி

புகழ்பெற்ற தஞ்சை சரஸ்வதி மஹாலில் உள்ள நூல்களில் ஒரு பகுதி, சரபோஜி மன்னர் காசிக்குப் போயிருந்தபோது அந்நகரில் அவர் சேகரித்தவை.

அதை அவரிடமிருந்து திரும்பப் பெற்றுக் கொண்டார் பண்டா. அன்று அடிகள் அந்தக் காசைக் கொடுக்காமலிருந்தால் அவர் நரக வாசம் செய்யும்படி நேரிட்டிருக்கும்.

கங்கையின் கரையிலே மிகப் பெரும் அறிவாளிகளும் ஞானியரும் வாழ்ந்திருக்கின்றனர். அவர்களுள் மகாத்மா கபீரும், கோஸ்வாமி துளசியும் முக்கியமானவர்கள். இருவரும் அவதி மொழியில்தான் எழுதினார்கள். (அவத்—அயோத்தியின் திரிபு) ஒருவர் சற்குண உபாசகர். மற்றவர் நிர்க்குணப் பிரம்மத்தை வழிபட்டவர்.

கபீர் கைக்கோளராய் வாழ்வு நடத்தினார். தன்னுடைய பணி முழுவதும் இறைவனுக்காகவே செய்யப்படுவதாகக் கருதினார். ஆடை நெய்யும் போதுகூட அதை நாராயணனுக்கென்றே நெய்தார். ஜீனி, ஜீனி, பீனி சத்தரியா', என்று அவன் பாடிக் கொண்டே தறியை இயக்கிய காட்சியை அகக் கண்களால் கண்டு ஆனந்தப்படுகிறார் பூஜ்ய வினோபாஜீ.

கபீர் மூடநம்பிக்கைகளுக்குப் பரம வைரி. 'கங்கையில் மூழ்கி ஒருவன் முக்தி பெறலாமென்றால் ஆற்றிலுள்ள மீன்கள் எல்லாம் மோட்சத்திற்கல்லவா போக வேண்டும்?' என்று சினந்து கேட்கிறார். ஆனால் அவரே 'என் மனம் கங்கையைப் போல் தெளியுமானால் இறைவன் என்னைத் தேடி ஓடி வருவானே' என்கிறார். கங்கை என்பது புனிதத்திற்கு மறு பெயர்.

'ஈதற்குச் செய்க பொருளை' என்கிறது திரிகடுகம். பொருளீட்டுவதன் பயனே ஈதல் என்று கருதும் தனவணிகர் சமூகத்தினர் எல்லா சமயத் தலங்களிலுமே இறைவன் பணியைச் செம்மையுறச் செய்து வருகின்றனர். சமயத் தலங்களில் தலைமையிடம் பெற்ற காசியிலும் அவர்கள் புரியும் தொண்டு நல்லவர்கள் உள்ளத்தை நெகிழ வைப்பதாகும். ஆலயங்களைப் புதுப்பித்தல் அறக்கட்டளைகளை ஏற்படுத்தி அவற்றைச் சரிவர நிறைவேற்றுதல், யாத்திரிகர்களுக்கு உண்டியும் உறையுளும் அளித்தல், எல்லாவற்றிற்கும் மேலாக இன்முகம் காட்டி நன்மொழி பேசுதல், ஆகிய துறைகளில் அவர்களை மிஞ்சுவதற்குக் காசியில் யாரும் கிடையார்.

காசியை நான் நேசிக்கிறேன். அதன் அழுக்கு, சாக்கடை துர்க்கந்தம், மயானம் உள்பட அனைத்தையும் நேசிக்கிறேன். ஏனெனில் காசி என்பது என்னிலிருந்து வேறுபட்டதல்ல. கங்கை ஒன்றை மட்டும் என்னுள் ஓடச் செய்ய முடியுமானால் மற்றத் தூய்மைக் கேடுகள் எவையும் என்னைப் பாதிக்கமாட்டா.

காசியில் செய்யப்படும் ஒவ்வொரு தொண்டும் இந்து சமய வளர்ச்சிக்குப் பேருதவி புரிவதாகும்.

# காஞ்சி காமாட்சி

டாக்டர் ந. சஞ்சீவி

காசி விசாலாட்சி; 'காஞ்சி காமாட்சி' மதுரை மீனுட்சி என்பது மக்கள் வாக்கு. அகர வரிசைப்படி அமைந்த இந்த முறையில் பூகோள அமைப்பும் பொருந்தி வருகிறது. வடக்கிருந்து தெற்கு நோக்கின் இம்மூன்றுள் நடு நாயகமாக இருப்பது காஞ்சி காமாட்சி. கங்கைக் கரையிலே விசாலாட்சி; பாலாற்றங்கரையிலே காமாட்சி; வைகைக் கரையிலே மீனுட்சி.

அன்னேயின் சிறப்பெல்லாம் அவள் அருட்பார்வையிலே அமைந் துள்ளது. அதனுலேயே போலும் மூன்று தாயார்க்கும் கண்ணே வைத்தே பெயர் வந்துள்ளது. விசாலாட்சி பெருங் கண்ணி; காமாட்சி இன்பக் கண்ணி; மீனுட்சி அங்கயற் கண்ணி. விசாலாட்சி பெருங் கண்ணி; பேரருள் புரிபவள், காமாட்சி இன்பம் வழங்கும் கண்ணி; மீனுட்சி மீன் போலும் அழகுக் கண்ணி, அருட் கண்ணியும் ஆவாள். எனவே மூவரும் கருணேக் கண்ணியராதல் வெளிப்படை.

காஞ்சிபுரத்தில் எந்தச் சிவன் கோயிலிலும் தனி அம்மன் சந்நிதி இல்லே. காமகோட்டமே - காமாட்சி கோயிலே - பொது அம்மன் சந்நிதி. காஞ்சியில் எத்தனேயோ கோவில் இருந்தாலும் காமாட்சி சந்நிதியிலேயே இராஜவீதிகள் அமைந்துள்ளதும் அறியத் தக்கது.

காமாட்சி கோயில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. இக்கோயில் கரிகாலன் காலத்தது என்று கருதத் துணேபுரியும் பிற்காலத்துப் பரணி பாடல் வருமாறு:

'' கச்சி வளேக்கைச்சி காமக்கோட் டங்காவல்
மெச்சி இனிதிருக்கு மெய்ச்சாத்தன் — கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
செம்பொற் கிரிதிரித்த செண்டு'

இதற்கடுத்தபடி இதன் பழமைக்கு சமய உலகில் பெருஞ்சான்று களாய்த் திகழ்வன ஆதிசங்கரர் தொடர்பும் தேவாரக் குறிப்புக் களுமே ஆகும். 'காஞ்சி காம கோடி பீடத்தின் சிறப்பு பெருஞ் சிறப்பு. காமாட்சி கோயில் காமகோட்டம் என்று வழங்கப்பெறும். கோட்டம் என்ருல் கோயில். காமாட்சித் தெய்வம் பற்றிக் கலேக் களஞ்சியம் தரும் குறிப்பு வருமாறு:

'காமாட்சி' என்பதற்குத் தன் திருநோக்கால் உயிர்களின் விருப் பங்களே நிறைவிப்பவள் என்று பொருள். மும்மூர்த்தியையும் கண் களாகக் கொண்டவள் என்றும் பொருள் செய்வர். க- பிரமன்; அ- திருமால்; ம-உருத்திரன்; அட்சம்-கண். கயிலேயில் சிவபெருமா னுடன் வீற்றிருந்த உமையம்மை ஒரு முறை சிவபிரான் கண்களேத் தம் கைகளால் மூடினுர். அப்போது உலகெங்கும் இருண்டது. அத்தீவினேயைப் போக்கிக் கொள்ள விரும்பிய காமாட்சி சிவபிரான் கட்டளேப்படி காஞ்சிபுரத்திலே முப்பத்திரண்டறங்களும் இயற்றியும்,

காஞ்சிக்கு அருகிலுள்ள கம்பா நதியிலே மணலாற் சிவலிங்கம் அமைத்து. வழிபட்டும் சிவபிரானருள் பெற்ருர்.

காமாட்சி கோயில் ஒரு காலத்தில் புத்த கோயிலாக இருந்திருக்கக் கூடும் என்றும் கருதுவர். பின்னர் அங்கிருந்த தேவி பல வகைப் பலிகளும் கொண்டு அஞ்சத் தக்கதாய் இருந்ததை மாற்றி அமைத் தார், ஆதி சங்கரர் என்றும் கூறுவர்.

ஊன்பிலிற்று மழுவாளி கலவிதனி லொண்ணுதென் ருேர்ந்து நஞ்சந்
தான்பிலிற்றும் பாப்பணியை நீப்பவுங்கார் வண்டினங்க டதைந்து மூசத்
தேன்பிலிற்று நறுங்கடுக்கைத் தெரியலேப்பாம் பெனமருண்டத் தெரிய ஞுறுங்
கான்பிலிற்றத் தெருண்டனேயுங் காமக்கோட் டத்துமையைக் கருத்துள் வைப்பாம்.

* * *

கருக்காமக் கோட்டிமிர விளைய வனைத்து மொருங்கெய்திக் கலகஞ் செய்யுந்
தருக்காமக் கோட்டியெலா மறவெறிந்தா மினியென்றுந் தகைசா லன்பு
சுருக்காமக் கோட்டினைச்சே யரைகரங்கொண்ட டார்க்கு முலேச் சுவடு நல்குந்
திருக்காமக் கோட்டியம்மை சேவடிப்போ தெப்பொதுஞ் சிந்திப் பாமால்.

'காஞ்சிப் புராண'த்தில் **சிவஞான சுவாமிகள்**

---

## காசியைப் பற்றிய தமிழ் இலக்கியங்கள் சில

காசிக் கதிர் காமவேலர் திருவருட்பா—சிவஞானதேசிகர்

காசிக் கலம்பகம்—குமரகுருபர சுவாமிகள்

காசி கண்டம்—அதிவீரராம பாண்டியர்

காசித் தலத்தில் சத்தவாரணத்தில் எழுந்தருளியிருக்கின்ற 56 விநாயக மூர்த்திகளின் திருநாமங்கள்—சிவானந்த மூர்த்தி

காசி மான்மியம்—ஆசிரியர் தெரியவில்லை பதிப்பித்தவர் பறங்கிப் பேட்டை தெய்வநாயக முதலியார்

காசி ரகசியம்—மீனுட்சிசுந்தரம் பிள்ளை உரை—திருச்சிற்றம்பல ஞானியார்

காசி விசுவநாத சுவாமி பேரில் பதிகம் ஆசிரிய விருத்தம் —சுப்புராய ஐயர்

காசித் துண்டிவிநாயகர் திருவருட்பா—சிவஞான தேசிகர்





# குமர
# குருபரர்



முந்நூறு ஆண்டுகளுக்குமுன்பு தென்பாண்டித் திருநாட்டில் திருவைகுண்டத்தின் வடபாலுள்ள திருக்கைலாசத்தில் சைவ வேளாள குலத்தில் சண்முக சிகாமணிக் கவிராயரும் சிவகாமசுந்தரி அம்மையாரும் தவமிருந்து பெற்ற செல்வமே குமரகுருபரர். ஐந்தாண்டு வரை பேச்சு வாராமலிருந்த இவரை இவர் பெற்றோர் திருச்செந்தூர் எடுத்துச் சென்று செந்திலாண்டவர் சந்நிதியில் வளர்த்திவிட்டு வரங்கிடந்தனர். பெற்றோரின் வேண்டுகோளுக்கு இணங்கி ஆறுமுகப்பெருமான் அருள் செய்ய குமரகுருபரர் அப் பெருமானையே பொருளாகக் கொண்டு கந்தர் கலிவெண்பா பாடினார். பின்னர் பல சிவ தலங்களிலும் வழிபாடு செய்துவிட்டு மதுரை மீனாட்சியை வழிபட்டு மீனாட்சியம்மைப்பிள்ளைத் தமிழ் பாடினார். அந்நூல் அரங்கேறிய போது மீனாட்சியம்மையே குழந்தையாக வந்திருந்து கேட்டு மகிழ்ந்து தம் திருக் கழுத்திலிருந்த முத்துமாலை ஒன்றைக் கழட்டி குமரகுருபரருக்கு அணிவித்து அருளினார் என்பர். இந்நிகழ்ச்சிக்குப்பின் குமரகுருபரரின் ஞான வேட்கை மிகுதியாயிற்று எனலாம். அதன் காரணமாகத் தக்க குருவைத் தேடலானார். அதன் பயனாகத் தருமபுர ஆதீனத் தலைவர் ஸ்ரீ மாசிலாமணி தேசிகரையே தம் ஞான குருவாகப் பெற்றார். அவர் கட்டளைப்படி பல தலங்களையும் தரிசித்துப் பல நூல்களையும் இயற்றிய பின் காசிக்குச் சென்றார். அங்கே பேசப்பட்ட இந்துஸ்தானியை விரைவில் கற்று கலைமகள் அருளால் அம்மொழியில் சிறந்தபுலமை பெற்றுஅரசரிடம்பேசிமகிழ்வித்துமடம் ஒன்று கட்டுதற்கு இடம் ஒன்று பெற்றார். அவ்விடம் கேதார கட்டத் தில் அமைந்தது. அது காறும் அங்கு மறைக்கப்பட்டிருந்த விசுவலிங்கப்

பெருமானை வெளிப்படுத்திக் கோயில் முதலியன கட்டி தின வழிபாடு கள் நடக்க ஏற்பாடும் செய்தார். குமர குருபரர் கட்டிய இம்மடம் குமாரசாமி மடம் எனப்படும். இம்மடத்தில் பலகாலம் தங்கி இந்தி மொழியில் புராணப் பிரசங்கங்கள் புரிந்து குமரகுரபரர் வடநாட்டில் பக்தி நெறியைப் பரப்பினர். இவருரைகளைக் கேட்டு இன்புற்றவர் களில் துளசிதாசரும் ஒருவர் என்பர். இவர் இயற்றிய பிரபந்தங்கள் 14.

குமரகுரபரர் அமைத்த குமாரசாமி மடத்தின் தலைவராகவும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபராகவும் இப்போது விளங்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தென் பாண்டித் திருநாட்டில் பிறந்தவர். இளமையிலேயே சமயப் பற்று நிரம்பப் பெற்றவர். திருவண்ணுமலையாரிடம் பேரீடுபாடு கொண்ட பெரியவர். அதன் காரணமாகவே தாம் அந்நாளில் வகித்த அரசூழியத்தைத் துறந்தார். பின் தருமபுர மடத்தில் சேர்ந்து துறவு நிலையில் வாழ்ந்து 1944-ஆம் ஆண்டு மார்ச் 26 ஆம் நாள் திருப்பனந் தாள் காசி மடத்தில் தலைவராய்ப் பதவி ஏற்ருர். மடத்தின் வருவாயை எல்லாம் அறக்கட்டளைகளாக மாற்றும் அண்ணல் இவர். சிறப்பாக வடநாட்டில் சைவ நெறி பரவ இவர் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளை கள் போற்றத் தக்கன.

# அம்பிகையின் திருவடிகள்

சிவாச்சார்ய திலகம்

தி. ச. சாம்பமூர்த்தி சிவாச்சார்யார்

பவானி த்வம் தாஸே மயி விதரத்ருஷ்டிம் ஸகருணாம்
இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வமிதிய;
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜசாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரமேந்த்ர ஸ்புடா மகுட நீரஜிதபதாம்

— ஸௌந்தர்யலஹரி, 22

அம்பிகை உலகத்திற்கு அளவற்ற கருணையுடன் அருள் செய்பவள் காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி என்று அவள் கண்களைத் தேவர்கள் புகழ்ந்து போற்றுகிறார்கள்.

அருள் நிறைந்த விரிந்த பார்வையால் இந்த உலகை ஆள்பவள் காமாக்ஷி.

மீன் போன்ற கண்களால் உலகைப் பார்ப்பதின் மூலமே உண வூட்டி உயிரூட்டிக் காப்பவள் மீனாக்ஷி.

விசாலாக்ஷியோ விசுவநாதனுடன் இணைபிரியாமல் இருந்து கொண்டு தனது அகன்ற கண்களால் அநவரதமும் அருள் பாலிப் பவள். அவள் கருணைக்கு அளவே இல்லை. சாட்சாத் பரமேசுவரனின் பெருமையெல்லாம் அம்பிகையின் பெருமையோடு சேர்ந்தே உள்ளது. சிவபெருமான் இளமை மாறாத பிரம்மசாரி. அன்னையோ உலகையீன்றவள்; அவள் கன்னி—கன்யாகுமரி!

கருணை மிகுந்த அன்னை தனது கரத்தில் அளவற்ற ஆயுதங்களைத் தாங்கித் தேவர்களுக்காக போரிட்டாள். இந்த ஆயுதங்கள் அவுணர்களை அழிப்பதற்காக அன்னையால் ஏற்கப்பட்டதே ஒழிய அதனால் வேறு யாருக்கும் எவ்விதத்}தொல்லையும் கிடையாது,இதையே ஸ்ரீ துர்க்கைச் சித்தரும் தனது நவராத்திரி கவசத்தில்

உம்கரத்து உயர்படைகள் எம்மிடரை எரிப்பதற்கும்
வம்மனத்து வசையுடலார் வஞ்சகத்து அசுரர்களை
தம்வயத்துத் தானிழுத்துத் தரையிலிட்டுத் தகைப்பதற்கும்
அம்கரத்தில் அணிசேர்த்தீர் அன்னையரே அன்னையரே!

என்று பாடுகின்றார்.

மனிதர்களுக்கு ஏற்படும் எல்லாத் துன்பங்களில் இருந்தும் விடுபட அன்னையையே தியானிக்க வேண்டும். அவள் கருணையில்லாமல் கலியில் எதுவும் செய்ய முடியாது. சக்தியின் பெருமை அவ்வளவு பெரியது.

மனிதர்கள் தெரிந்தோ தெரியாமலோ 'பவானி' என்று சொன்ன மாத்திரத்தில் தன்னைத்தான் அழைத்தான் என்று தேவி ஓடி வந்து காப்பாள் என்று ஆதி சங்கர பகவத் பாதர்கள் கூறுகிறார்கள். வாய் தவறி அழைத்தாலே அவள் வருவாள் என்றால் உள்ளம் உருகி—ஊன் உருகி—உயிர் உருகி உணர்வு கலங்க அழைக்கும் அன்பர், பெற்று மகிழஇருக்கும் நலன்கள் எண்ணில் அடங்காதன— எழுதி நிறை யாதன.

**ந தாதோ ந மாதா ந பந்துர் ந தாதா**
**ந புத்ரோ ந புத்ரீ ந ப்ருத்யோ ந பர்த்தா!**
**ந ஜாயா ந வித்யா ந வ்ருத்திர மமைவ**
**க திஸ் த்வம் கதிஸ்த்வம் த்வமேகா பவானி !!**

என்று பவானி அஷ்டகத்தில் அம்பிகையின் அளவற்ற பெருமையை பகவத்பாத சங்கரர் பேசுகிறார்.

அம்பிகையின் பல்வேறு ரூப விசேஷங்களில் சாக்ஷாத் காமாக்ஷியான ராஜராஜேஸ்வரியின் ரூபலாவண்யம் மிகவும் விசேஷ மானதாக விளங்குகின்றது. இந்த ரூபத்தில் அம்பிகைக்கு அபய, வரத ஹஸ்தங்கள் கிடையாது. பராசக்தியான அம்பிகைக்கு நான்கு கரங்களிலும் கரும்பு வில், புஷ்ப பாணங்கள், பாசம், அங்குசம் இவைகள்தான் ஆயுதங்கள், அணிகள் எல்லாம்.

அம்பிகைக்கு வரத-அபய ஹஸ்தங்கள் இல்லாததற்கு ஆதி சங்கரர் அழகான காரணம் காட்டுகிறார்.

பராசக்தியின் திருவடிகள் பக்தர்கள் வேண்டுவதை வழங்க வல்லன. அவைகள் வேண்டும் வரத்தையும் தருகின்றன. அபயமும் அளிக்கின்றன. மற்ற எல்லா தேவர்களும் தனது கரத்தால் வழங்கும் எல்லாவற்றையும் அம்பிகை தனது சரணங்களாலேயே வழங்கி விடு கிறாள். அவள் பதங்களைப் பணிபவர்களுக்கு எந்தவிதமான பயமும் பீதியும் இல்லை. அந்தக் கருணைக் கடலான தேவியைச் சரணம் அடைபவர்கள் பாக்கியசாலிகள். உண்மையான மனத்துடன் நாம் அம்பிகையைச் சரணடைந்தால் என்றும் குறையாத அதிக வரம் அடைந்திடலாம்!

**உர்வி ஸர்வ ஜனேச்வரி மாதா க்ருபா ஸாகரீ**
**வேணி நீ லஸமான குந்தலதரீ நித்யான்ன தானேச்வரீ**
**ஸர்வானந்தகரீ ஸதாசுபகரீ காசீ புரா தீச்வரி**
**பிக்ஷாம்தேஹி க்ருபர் வலம்ப நகரீ மாதான்ன பூர்ணேச்வரீ!**





# அன்னகூட்

அன்னகூட் என்பதை ''தின்பண்டங்களின் திரள்'' என்று தமிழில் குறிப்பிடலாம்.

தீபாவளிநாளன்று, அன்னபூரணி கோவிலில், மேன் மாடியில், தங்க அன்ன பூரணியை அலங்காரம் செய்து வைப்பார்கள். அன்னபூரணியின் இடதுபுறத்தில் இலக்குமி யின் திருவுருவம் அலங்கரிக்கப் பெற்றிருக்கும்.

ஒரு கையில் தங்கப் பாத்திரமும் மற்றொன்றில் தங்கக் கரண்டியும் ஏந்தி, அமர்ந்திருக்கும் நிலையில் அன்னபூரணி திருவுருவம் அமையும். எதிரில் தங்கத் திருவோடேந்திச் சிவபெருமான் நிற்பார். அன்னபூரணியன்னை இறைவனுக்கே உணவு படைப்பதாக இதன் கருத்து. அன்னையின் திருவுரு வத்துக்கெதிரில், தாலங்கள் (பெருந்தட்டுகள்) வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் அவை குறைந்தது முப்பதாவது இருக்கும். ஒவ்வொன்றிலும் வடநாட்டுத் தின்பண்டம் ஒன்று (பெரும்பாலும் இனிப்பு) அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். இக்காட்சியைக் காண ஏராளமான மக்கள் கூடுவார்கள். மூன்று நாட்கள் கழித்தபின், இத் தின்பண்டங்களைப் பிரசாதமாக, முன்னரே பணம் செலுத்திச் சீட்டு வாங்கி வைத்திருந்த அன்பர்களுக்கு வழங்குவார்கள்.

மீண்டும் இக்காட்சியை அடுத்த தீபாவளியன்றுதான் காணலாம்.

# கல்வியிற் கரையிலாக் காசி

ஹிந்துக்களின் கோவில்களில் எத்தனை இறையுருவங்கள் உண்டோ, அவை அனைத்துக்கும் காசியில் கோவில்கள் உள்ளன. சிவபெருமான். கேதார ஈசுவரர், அன்னபூரணி, விசாலாட்சி, துர்க்கை, காளி. அநுமன், சாட்சி விநாயகர், துண்டிவிநாயகர், பஞ்சமுகலிங்கர். பஞ்சபாண்டவர், கௌரி சங்கர், வயிரவர், நகரத்தார் சத்திரத்தில் பாதாள ஈசுவரர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, மாணிக்க வாசகர் — இப்படி எவ்வளவோ கோவில்கள் மலிந்தது காசி. காசிக்குப் பெருமை தரும் விசுவநாதர்க்கு மூன்று கோவில்கள் உண்டு— புகழ் பெற்ற விசுவநாதர் பொற்கோவில், ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை எதிர்த்து உண்டான நயாமந்திர், பல்கலைக் கழகப் பகுதியில் பிர்லா மந்திர்.

மூவாயிரம் ஆண்டுகளாகவே இலங்கை, பர்மா, நேபாளத்திலிருந்தும், இந்தியாவெங்குமிருந்தும் பல்லாயிரவர் காசியில் சாத்திரங்களையும் வேதங்களையும் புராணங்களையும் சமஸ்கிருதத்தையும் பயின்றிருக்கின்றனர்.

புத்தர்பிரான் காசிமாநகர் எல்லையிலுள்ள சாரணத்தில் தான் தம்முடைய கொள்கைகளை முதலில் உலகுக்கு உணர்த்தினர். பேரறிஞர்களும் சீர்திருத்த வாதிகளும் காசியில் கல்வி கற்று, காசிநகர்ப் புலவர் உரைக்கும் அறிவு விருந்துகளைத் துய்த்துப் பயன் பெறுவதை ஒரு பேருகக் கருதிவருகின்றனர். சங்கராச்சாரியர், சைத்தனிய மகாபிரபு, சுவாமி தயானந்த சரசுவதி, கபீர்தாஸ், கம்பர், துளசிதாஸ், குமரகுருபரர், கவியரசர் சுப்பிரமணிய பாரதியார், தத்துவமேதை இராதா கிருஷ்ணன் - இவர்கள் அனைவர் வரலாற்றிலும் காசி சிறப் பிடம் பெறுகிறது.

**சிறிய இந்தியா:**

இந்தியாவின் படப்பிடிப்பாக காட்சிதருகிறது காசி. அநுமன்கட்டம் தமிழர்கள் பல்லாயிரம் பேர் வாழும் பகுதியாகும். 'பெங்காலி டொல்லா'வில் வங்காளிகள் பெருந் தொகையாக இருக்கிறார்கள். இவைபோன்றே, நேப்பாளி கப்டா, துத்விநாயக், பிரகலாத கட்டம், கேதாரக் கட்டப்

பகுதிகளில் பலமொழியாளர் உள்ளனர். செப்புமொழி பதினெட்டையும் இந்நகரில் கேட்கலாம்.

எல்லா மொழிகளும் ஒலிக்கும் காசியில் வகைவகையான வண்ண உடைகள் உடுத்திய மக்களைக் காணலாம். மகளிர் மனத்தை ஈர்க்கும் பட்டுச் சேலைகளும் வளையல்களும் குங்குமப் பொட்டும் இங்கே புகழ் பெற்றவை. இவற்றை விரும்பாத, வாங்காத மங்கையர் எவருமில்லை. இவ்வாறே காசி வெற்றிலையைச் சுவையாத ஆடவரும் இல்லை; ஒவ்வொன்றும் ஐந்து ரூபாய் முதல் ஐநூறு ரூபாய் வரை பனாரஸ் பீடாக்கள் உள்ளன.

**வடமொழிப் பண்ணை :**

இந்தியாவெங்குமுள்ள ஏழை எளியவர், காசிமாநகரில் தங்கி இலவச உணவு பெற்றுக் கல்வி பயில வாய்ப்பு நல்கும் பல சத்திரங்கள் காசிமாநகருக்குப் பொலிவும் சிறப்பும் தருகின்றன, முறையாகக் கல்விபுகட்டும் பள்ளிக்கூடங்கள் ஒருபுறம், அதை விட முக்கியமானது தலைமுறை தலைமுறையாக சமஸ்கிருத மொழியில் பெரும் புலமை பெற்ற 'குருக்கள்'... அல்லது ஆசிரியர் பரம்பரை.

**காசி ஹிந்து பல்கலைக்கழகம் :**

1916-இல் அன்னை பெசண்டு அம்மையார் ஏற்படுத்திய ஹிந்துக் கல்லூரி பண்டித மதன்மோகன் மாளவியாவின் பெரு முயற்சியாலும் இந்திய மன்னர்களின் வள்ளன்மையாலும் 1918-இல் காசி ஹிந்து பல்கலைக்கழகமாக உருவம் பெற்று ஆசியாவிலேயே குறிப்பிடத்தக்க அறிவுப் பண்ணையாகவும், உலக மக்கள் பலருடைய உள்ளத்தை ஊடுருவியுள்ள கலைக் கோவிலாகவும் வளர்ந்திருக்கிறது.

இயல், இசை, நடனம், இந்தியப் பண்பாடு, வேளாண்மை மருத்துவம், வாணிகம், மொழியியல் ஆகியன இங்கு புகட்டப் படுகின்றன. சென்ட்ரல் ஹிந்துக் கல்லூரி, பாரதியமகாவித்தியாலயம், சமஸ்கிருதமகாவித்தியாலயம், விஞ்ஞானக் கல்லூரி, சட்டக்கல்லூரி, மகளிர் கல்லூரி, ஆயுர்வேதக் கல்லூரி, ஆங்கில மருத்துவக்கல்லூரி, இசைக் கல்லூரி, நுண்கலைக்கல்லூரி, ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, ரசாயனத் தொழிற்கல்லூரி, சுரங்கம்—உலோக இயல் கல்லூரி, நூலகக் கல்வி நிறுவனம், ஆகியவை பல்கலைக்கழகத்தின் பகுதிகளில் சில. அரிய கலைப் பொருள்களின் காட்சிக் கூடமும், பெரியதொரு நூலகமும், மருந்துச் செடித் தோட்டங்களும், பெரிய மருத்துவ மனையும்

உள்ளன. காசிமா நகருக்குள் தயானந்தர் கல்லூரியும், பெசண்டு கல்லூரியும் இயங்குகின்றன.

**பிற நிலையங்கள் :**

வாரணசியில் சமஸ்கிருதப் பல்கலைக்கழகம் ஒன்றும், ஹிந்தி மொழிவாயிலாகவே பாடங்கள் கற்பிக்கப்படும் காசிவித்யா பீடம் என்ற பல்கலைக்கழகமும் நடைபெற்று வருகின்றன.

நாகரி பிரசாரனி சபை என்ற நிலையம் ஹிந்தியில் பல்லாயிரம் ஏட்டுச்சுவடிகளைப் பேணி வருகிறது. ஹிந்திக் கலைக் களஞ்சியத்தையும், பதினெட்டுத் தொகுதிகளில் ஹிந்தி மொழியின் வரலாற்றையும் வெளியிட்டிருக்கிறது.

காந்தியன் இன்ஸ்ட்டியூட் ஆப் ஸ்டடிஸ் என்ற பெயரில் காந்தியடிகளின் கொள்கைகளை ஆராயும் நிலையமும் தென் கிழக்கு ஆசியாவில் கலை, புதை பொருள் ஆகியவற்றைப் பற்றி ஆய்வு நடத்தும் அமெரிக்கன் அகடமி ஆப் பெனரஸ் என்ற நிறுவனமும் இந்நகரில் இயங்குகின்றன.

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகர சத்திரம்
श्री काशी नाटुकोटई नगर क्षेत्रम्
SRI KASHI NATTUKOTTAI NAGARA CHATRAM
VARANASI

## ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டி

## அறிக்கை

கல்கத்தாவுக்கு அடுத்த தாடகேஸ்வரத்தில் நமது சொசைட்டிக்குப் பாத்தியமாயுள்ள மடம்தோட்டம் சேர்ந்த இடத்திற்குக் கிழக்குப் பக்கத்தில், ஷை தாட கேஸ்வரம் எஸ்டேட் மகந்திடம் பின்னே 1907-ஆ ஜூன்மீ 7உ 2000 ரூபாய் இனும் மான்யமாகக் கொடுத்து செட்டில் மெண்டு செய்து இடம் வாங்கி ஒரே காம் பவுண்டாக ஆக்கப்பட்டிருக்கிறது. பின்னே வாங்கப்பட்டுள்ள இந்த இடம், நம்முடைய பழைய மடம் தோட்டம் வகையரா சேர்ந்த மொத்த விஸ்திரணத்தில் சுமார் பாதியிருக்கும். செட்டில் மெண்ட் ஷரத்துப்படி, நாம் இந்த இடத்தை சொந்தத்திற்கு உபயோகித்துக் கொள்ளலாமேயல்லாது, மற்றொருவருக்கு கிரையம், ஒத்தி, அல்லது இனும் முதலிய எந்தப் பந்தத்திற்கும் உட்படுத்தவோ, அன்றி அந்த இடத்தில் வருவாய் வருவதற்கான ஏற்பாடுகள் செய்யவோகூடாது. இந்த இடத்தை வாங்குங் காலத்தில் அதற்கு செலுத்தப்பட்டிருக்கும் ரூபாய் இரண்டாயிரத்தைத் தவிர வருடந் தோறும் வரியாக ரூபாய் 257-13-0 ஷை எஸ்டேட்டுக்குச் செலுத்தி வருகிறோம். ஆனால் இதைப்போல் இரு மடங்கு விசாலமான நம் முடைய பழைய மடம் தோட்டம் முதலியவற்றிற்கு வருடம் ஒன்றுக்கு நாம் செலுத்தி வரும் வரி 70-15-6 தான்.

செட்டில்மெண்டுப்படி வாங்கப்பட்டுள்ள இந்த இடத்தில் சுற்றிலும் தூண்கள் நட்டு தார்சாக கட்டிவிடப்பட்டிருக்கிறது. ஆனால் சமீப காலத்தில் இந்த தார்சுகளில் சில பாகம் இடிந்து விட்டது. கீழே தளமும் ரிப்பேருக்குரியதாய்க் கிலமாய்க் கிடக்கிறது.

கல்கத்தாவில் நமது நகரத்தார்கள் கடைகள் முன் ஜாஸ்தியா யிருந்தால் அவர்கள் போய்த்தங்கி வர சௌகர்யத்திற்காகவும், யாத்திரையாக வரும் நம்மவர்கள் சௌகர்யத்தைக் கருதியும் அந்தக் காலத்தில் இந்த இடம் செட்டில்மெண்டுப்படி வாங்கிச் சேர்க்கப்

பட்டதாய்த் தெரிகிறது. இப்போது கல்கத்தாவில் நம்மவர்கள் கடைகள் மிகுதியாயில்லை. யாத்திரையாக வரும் நமது நகரத்தார்களும் கல்கத்தாவிலிருந்து தாடகேஸ்வரத்திற்குச் சென்று சுவாமி தெரிசனம் செய்துகொண்டு உடனே கல்கத்தா திரும்பி விடுகிறார்கள். கல்கத்தா விலிருந்து தாடகேஸ்வரம் வரை நாள்தோறும் ஆறு ரெயில் வண்டிகள் போய் வந்துகொண்டிருப்பதால், யாத்திரையாகச் செல்பவர்கள் உடனே திரும்பி விடுவதற்குச் சௌகர்யமாயிருக்கிறது. இதற்கிடை யில் அவர்கள் தங்கி வருவதற்கு நமது பழைய மடம் வகையரா போதிய சௌகர்யத்திற்குரியதாயிருக்கிறது.

செட்டில் மெண்டுப்படி வாங்கப்பட்டுள்ள இந்த சொற்ப இடம் நமக்கு இப்போது அவஸ்யமற்றதாயும் ஜாஸ்தியான வரிச்செலுத்திக் கொண்டு வருவதற்கேதுவாயுமிருப்பதால் இந்த இடத்தையும் மற்றும் காசி வகையரா சத்திரங்களின் நடவடிக்கைகளையும் கவனித்து வரும்படி இவ்விடம் காரியாலயக் காரியஸ்தரை சமீபத்தில் அனுப்பி வைக்கப்பட்டது. ஷியார் போய்ப் பார்த்து வந்து சமர்ப்பித்த ஸ்டேட் மெண்டு சொசைட்டிக் காரியக் கமிட்டியிலும், நிர்வாக சபையிலும் ஆலோசிக்கப்பெற்றதில் மேலே குறிப்பிட்டுள்ள இந்த இடம் அவஸ்யமற்றதாயிருப்பதால் அது தேவையில்லை யென்றும் வருடம் ஒன்றுக்கு வரி ரூ. 275-13-0 கட்ட வேண்டியதை நிறுத்தி இந்த இடத்தைத் திரும்பவும் ஷி தாடகேஸ்வரம் எஸ்டேட்டிடம் ஒப்படைத்து விடுவதென்றும் நிர்வாக சபையார் கருதுகிறார்கள்.

— குமரன் **23-12-1937**

### ஓ. சிறுவயல் நகரத்தார் முயற்சி

ஸ்ரீ காசி நகரச் சத்திரத்துக்கு வரவேண்டியதும் சமீபத்தில் வசூலாவதற்குக் சிரம சாத்தியமானதாகவுமிருந்த ஒரு பெருந் தொகையை ஒரே தேதியில் ரொக்கமாக வசூலித்தனுப்பிய ஓ. சிறு வயல் நகரத்தார்களின் முயற்சி போற்றுதற்குரியதாகும், என்றும், ஷி நகரத்தார்களுக்கு நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மானேஜிங் சொசைட்டி சார்பாக தமது வந்தனத்தை தெரிவித்துக் கொள்வதாக வும் ஷி சொசைட்டி காரியதரிசி திரு கப. க. அ. லெட்சுமணன் செட்டியாரவர்கள் அறிவிக்கிறார்கள்.

— குமரன் 15-8-1935

## 1969

நந்தவனத்தில் தண்ணீர் வழங்க, நேமத்தான்பட்டி கே. ஆர். சடையப்ப செட்டியார் 'பம்பு' உதவியுள்ளார்கள்.

## 1970

தீபாவளிக்கு வந்திருந்த தெற்கு வட்டகை நகரத்தார்ப் பெண்டிர் காசி நகரச் சத்திரத்தில் தண்ணீர்ப் பம்பு அமைத்திருக் கின்றனர்.

## 1971 ஆகஸ்ட், செப்டம்பர்

தேவகோட்டை (பவானி) சோம. அரு. கிருஷ்ணன் செட்டியார் தங்க முலாம் பூசிய குடமும் செம்பும் நல்கியுள்ளார்கள்.

தேவகோட்டை மெ. லெ. மெ. குடும்பத்தார் மின்சாரத்தால் இயங்கும் ஆட்டுக்கல் வழங்கியிருக்கிறார்கள்.

ஏ. வி. எம். ஸ்டுடியோ உரிமையாளர் ஏ. வி. மெய்யப்ப செட்டியார் மின்சாரத்தால் இயங்கும் சந்தனம் அறைக்கும் இயந்திரத்தை அன்பளித்திருக்கிறார்கள். 15 வாழைத்தண்டு விளக்குகளையும் (Tube Lights) அவர்கள் நன் கொடையாக அனுப்பியுள்ளனர்.

இரங்கூன் பழைய நாலறை நகரத்தார்களுக்காக மேற்படியார் பிரதிநிதிகள் பாகனேரி வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார், பாகனேரி வெ. வெ. கரு. வே. சொ. சொக்கலிங்கம் செட்டியார், நாட்டரசன் கோட்டை சுப. எ. சுப. நா. சொக்கலிங்கம் செட்டியார் ஆகிய மூவரும், பால் கட்டளைக்காக 15,000 (பதினைந்தாயிரம்) தந்திருக்கிறார்கள்.

காரைக்குடி (சென்னை) A சுப்பையா செட்டியார் நினைவாக அவர்கள் மனைவி சுப. அழகம்மை ஆச்சி நகரச்சத்திரத்தில் தண்ணீர் டாங்கும் பைப்பும் போட்டுக் கொடுத்திருகின்றார்கள்.

The next shrine we visited was that of Visalakshi. She is a popular deity in ghat area. The standing statue of the goddess with a hallow is a very beautiful one indeed. She is the goddess dispensing Prosperity.

—Sri N. CHINNASWAMY NAIDU
Correspondent, MANI HIGH SCHOOL, COIMBATORE
in LIMEX, July 1971

## Visalakshi Shrine in Varanasi

MADRAS, Sept. 22

The Kumbabhishekam of the shrine of Sri Visalakshi Amman in Varanasi, undertaken by the Sri Kasi Nattukottai Nagara Sat-ram Managing Society, is to be performed on November 1. The Nagarathar community has been connected with the temple since 1812. In 1893, they renovated the temple and in 1908, installed a golden idol. Repairs have now been carried out and the idol renewed.

The Society also established a temple dedicated to Dandapani (Lord Muruga) a century ago at Panchavati (Nasik). Popularly called the Karthik Swami Mandir by the people of Maharashtra, this temple also is being renovated. The Kumbabhishekam is scheduled to take place on January 28, 1972.

— The Hindu, Thursday Sep 23 '71

போன் : 441373

கு. காமராஜ்

8, திருமலைபிள்ளை ரோடு
தி. நகர், சென்னை-17.
1—10—71

அன்புள்ள நண்பர் சோமநாதன் செட்டியார் அவர்களுக்கு

விசாலாட்சி கோயில் கும்பாபிஷேக அழைப்பிதழ் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி.

அதையொட்டி தாங்கள் வெளியிடும் சிறப்புமலர் சிறந்த முறையில் வெளிவர என் நல்வாழ்த்துக்கள்.

தங்களன்புள்ள,
காமராஜ்

The temple of VISALAKSHY, (Siva's wife) in a narrow lane close to the Mir Ghat was built quite recently by the Nattukkottai Chettiars of Southern India, over a site adjoining the original one of this Devi. It is said that a large sum of money was spent for this fine little temple erected and for shifting the image from its original place to the present shrine.

From P. 107 of SMILING BENARES
a book published in 1911

# Jaganmata Visalakshi

A. V. SUBRAMANIA AIYAR

It gives me pleasure to respond to the request of Mr. Somalay for a short article for the souvenir.

For Hindus, to whatever sect they may belong or however parochical they may be, Benares or Kashi is the holiest pilgrim centre in India. Many of them believe that they will attain moksha if they die in Kashi and spend their old age there so that when they die they will be cremated at the Mahasmasanam and their ashes thrown into the Ganges waters.

Kashi is on the bank of the sacred river Ganga with its famous bathing ghats. This is probably a reason for the great sanctity attached to the city of Benares. It is also the seat of the temple of Viswanath (Lord Shiva) and many other temples of gods like Bindu Madhawa and Kala Bhairava and goddesses like Annapurna Visalakshi and Durga. One note-worthy feature about most of these temples is that though they are ancient, their present structures were built during the past two or three centuries only. The original temples were destroyed by Aurangazeb, the fanatic Moghul emperor who built mosques in their places. This event has intensified the veneration of people all over India towards Benares and its new temples, especially those of Viswanath and Annapurna and Visalakshi.

The original lingam of Viswanath which remained hidden in a well was taken and installed in the new temple built by Rani Ahalya Bai of Indore in the 18th century. In the same century the present Annapurna temple was built by a Maratha Peshwa ruler. Following their lead, the Nagarathar community of Tamil Nadu, the bulk of whom are pious Saivites constructed the temple for goddess Visalakshi [Lord Siva's Consort] near the site of the original temple. This was only an extension to Benares, of the work of constructing and renovating famous Shaivite temples in Tamil Nadu, which they had been doing for a long time at a cost of several crores.

In Tamil there is a Puranic poem of about 2500 stanzas called "Kasi Kandam" written by a latter day Pandya ruler Athivirarama Pandyan who lived about four hundred years ago. In that poem the holy city of Benares and the sacred Ganges have been glorified and a number of Puranic legends have been narrated about them. Loshta Devar, a Kashmiri poet of the 12th century who became a sanyashi and stayed at Benares till his death has composed Sanskrit poem "Dinakranthanam" in which he has poured forth his devotion to Lord Viswanath in melodious verses and prayed for his redemption. Let us follow him and pray Lord Viswanath and Goddesses Visalakshi and Annapurna to bless the poor and suffering people of India with peace and plenty, at this hour of their trial.

## ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்

மானேஜிங் சொசைட்டி

மேலமடம், காரைக்குடி–1

9-2-70 முதல் மூன்று ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள செயற்குழு.

தலைவர்

அள அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

துணைத்தலைவர்கள்

மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்,
காரைக்குடி.

சி. க. அரு. க. சோம. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
ஒக்கூர்.

செயலாளர்

கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்,
நாட்டரசன் கோட்டை.

துணைச் செயலாளர்கள்

மெ. செ. ச. மு. மெ. முத்துராமன் செட்டியார் அவர்கள்,
காரைக்குடி.

மது. குமு. மதுவப்ப செட்டியார் அவர்கள், வலையபட்டி.

பொருளாளர்

அ. ராம. அ. லெ. அ. முத்து வீரப்ப செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

உறுப்பினர்கள்

சா. கணேசன் அவர்கள் M. L. C., காரைக்குடி.

ராம. சீனிவாசன் செட்டியார் அவர்கள், ராயவரம்.

பி. சு. வ. பழநியப்ப செட்டியார் அவர்கள்,
விசுவநாதபுரம்.

S. மெய்யப்பன் அவர்கள், B.A., B.L., புதுவயல்.

சுப. அருணாசலம் செட்டியார் அவர்கள், பள்ளத்தூர்.

சுப. சண்முகம் செட்டியார் அவர்கள், (திருச்சி) கண்டனூர்.

சு. வி. நா. நாகப்பச் செட்டியார் அவர்கள், (கோயம்புத்
தூர்) நாச்சியாபுரம்.

கும. நா. சுப. நா. மாணிக்கம் செட்டியார் அவர்கள்,
செம்பனூர்.

வெ. கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள்,
நாட்டரசன் கோட்டை.

பெரி. அழ. மு. மு. அண்ணாமலை செட்டியார் அவர்கள்,
பாகநேரி.

மு. ப. மு. ராமசாமி செட்டியார் அவர்கள்,
கொப்பனாபட்டி.

கும. பெரி. முத்துராமன் செட்டியார் அவர்கள்,
நற்சாந்துபட்டி.

மு. கரு. ராம. ராமசாமி செட்டியார் அவர்கள், கூழிபிறை.

'சோமலெ' அவர்கள், நெற்குப்பை.

## கணக்குத் தணிக்கையாளர்

பெரி. தியாகராசன் செட்டியார் அவர்கள்,
பெரி. தியாகராஜ் அண் கோ, மதுரை.

T. R. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்,
புதுக்கோட்டை.

## பிரதிநிதி சபை உறுப்பினர்கள்

| | |
|---|---|
| செ. சு. செ. சின்னவீரப்ப செட்டியார், | தேவகோட்டை |
| அரு. அரு. சோம. சுந்தரேசன் செட்டியார், | ,, |
| செ. பி. ச. ச. பிச்சப்ப செட்டியார், | ,, |
| பாலகவி வே. ராமனுதன் செட்டியார், | ,, |
| ப. ராம. செ. ராமனுதன் செட்டியார், | ,, |
| உ. மு. சுப. லெ. மெய்யப்ப செட்டியார், | ,, |
| ஆவி. க. மெ. அரு. தியாகராசன் செட்டியார், | ,, |
| உ. மு. சுப. லெ. அழ. அழகப்ப செட்டியார், | பினங்கு (மலேசியா) |
| சா. நா. அ. சொ. அண்ணுமலே செட்டியார், | காரைக்குடி |
| தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கன், | ,, |
| பழ. நாச்சியப்ப செட்டியார், | ,, |
| க. அள. ராம. கரு. ராமசாமி செட்டியார், | ,, |
| லெ. பழ. அருணுசலம் செட்டியார், | ,, |
| கும. சிதம்பரம் செட்டியார், | ரெங்கூன் |
| ராம. வீர. ராமசாமி செட்டியார், | சிங்கப்பூர் |
| சா. நா. ராம. சு. சுப்பிரமணியன் செட்டியார், | கூலிம் (மலேசியா) |
| மு. வ. மு. ராமனுதன் செட்டியார், | வலேயபட்டி |
| வ. ராம. லெ LC மாணிக்கம் செட்டியார், | ,, |
| மது. கும. நடராசன் செட்டியார், | ,, |
| வீர. சி. அரு. சின்னக்கருப்பன் செட்டியார், | கீழைச்சிவற்பட்டி |
| சொ. கரு. சொ. சொக்கலிங்கம் செட்டியார், | பி. அளகாபுரி |
| ராம. மு. லெ. சிதம்பரம் செட்டியார், | பள்ளத்தூர் |
| சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார், | ,, |
| ந. மு. சொ. ராம. சொ. சோலேயப்ப செட்டியார், | ,, |
| காந்தி. அண்ணுமலே செட்டியார், | ரெங்கூன் |
| கண. க. சொ. கண்ணப்ப செட்டியார், | நாட்டரசன் கோட்டை |
| மு. பழ. நடராசன் செட்டியார், | ,, |
| அரு. சு. கண. சுப்பய்யா செட்டியார், | ,, |
| சி. வெ. நா. சோம. செல்லப்ப செட்டியார், | கண்டனூர் |
| பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியார், | ,, |
| கா. ச. அ. அ. மாணிக்கம் செட்டியார், | அரிமளம் |
| சோம. நடராஜன் செட்டியார், | ,, |
| வெ. பெரி. வேலாயுதம் செட்டியார், | கூழிபிறை |
| பெரி. சி. சின்னக்கருப்பன் செட்டியார், | கூழிபிறை |
| அகு. ராம. சு. சோ. அ. சோலேயப்ப செட்டியார், | ராயவரம் |

R. ரெங்கனுதன் செட்டியார், ரெங்கூன்
பெ. ராம. ராம. லெ. முத்துச் செட்டியார், நச்சாந்துபட்டி
M. காசிச் செட்டியார், வேந்தன்பட்டி
பெரி. வீர. ராம. பெரியணன் செட்டியார், புதுவயல்
செ. மு. முத்தப்ப செட்டியார், நெற்குப்பை
பழ. பெரி. லெ. லெட்சுமணன் செட்டியார், கோனுபட்டு
முரு. மு. மு. முத்துக்கருப்பன் செட்டியார், ,,
பெ. ராம. அண்ணுமலை செட்டியார், கோட்டையூர்
பெ. சி அரு அள. அருணுசலம் செட்டியார், ,,
பழ. ஷண்முகம் செட்டியார், கடியாபட்டி
அழ. ராமசாமி செட்டியார், ,,
கரு. சொ. சொக்கலிங்கம் செட்டியார், கண்டவருயன்பட்டி
வெ. பெரி. பழ. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார், பாகநேரி
சித. அ. நடராஜன் செட்டியார், ஒ. சிறுவயல்
கரு. மு சொ. சொக்கலிங்கம் செட்டியார், மேலைச்சிவபுரி
ஆவி. சா. சா. மெய்யப்பச் செட்டியார், கண்டரமாணிக்கம்
குழ. இராமசாமி செட்டியார், புதுப்பட்டி
முரு. மெ. சுப்பையா செட்டியார், ,,
ந. க ராம. ராமசாமி செட்டியார், ஈப்போ (மலேசியா)
ப. மு. முத்தய்யா செட்டியார், ரெங்கூன்
சி. ராம. நா. நா. ராமனுதன் செட்டியார், ஆ. முத்துப்பட்டணம்
கா. அரு. கா. காடப்ப செட்டியார், ஆத்தங்குடி
சி. சு. ராம. லெட்சுமணன் செட்டியார், கொத்தமங்கலம்
நா. கரு. ராம. ராமனுதன் செட்டியார், சிறுகூடல்பட்டி
வ. நா. சிதம்பரம் செட்டியார், ராங்கியம்
கரு. சடையப்ப செட்டியார், நோமத்தான்பட்டி
வயி. லெ. லெட்சுமணன் செட்டியார், விரையாச்சிலை
சுப. கண. நா. சுப்பிரமணியன் செட்டியார், அலவாக்கோட்டை
பழ. மு. முத்தய்யா செட்டியார், பனையப்பட்டி
நா. பழ. ராமசாமி செட்டியார், கொப்பனுபட்டி
அ. அரு. சொக்கலிங்கம் செட்டியார், குருவிக்கொண்டான்பட்டி
பெ. பெரி. சுப்பிரமணியன் செட்டியார், ஆவினிப்பட்டி
செ. பழ. சிதம்பரம் செட்டியார், மிதிலைப்பட்டி
லெ. லெ. வெ. முத்தய்யா செட்டியார், சிறம்பான் (மலேசியா)
முரு. க. அருணுசலம் செட்டியார், பலவான்குடி
சுப. உ. உடையப்ப செட்டியார், அ. சிறுவயல்
பழ. மு. நாகப்ப செட்டியார், சொக்கலிங்கம்புதூர்
செ. ராம. சொ. சோமசுந்தரம் செட்டியார், செவ்வூர்
சி. லெ. நாராயணன் செட்டியார், உலகம்பட்டி
சுப. கும. குமரப்ப செட்டியார், மகிபாலன்பட்டி

வயி. ராம. கி. ராமசாமி செட்டியார், அரியக்குடி
கூ, அரு. க. அரு. கண்ணப்ப செட்டியார், கீழப்பூங்குடி
பெரி பழ. ராமசாமி செட்டியார், விராமதி
மெ. ராமசாமி செட்டியார், வி. லெட்சுமிபுரம்
சி. கரு. சி. கரு. சின. கரு. ஆதப்ப செட்டியார், ஒக்கூர்
நா. லெ. ராமனுதன் செட்டியார், ரெங்கூன்
கதி. ராமனுதன் செட்டியார், வெத்தியூர்
முரு. ராம. முரு ராம. முருகப்ப செட்டியார், நடராசபுரம்
வ. செ. சிவலங்கம் செட்டியார், பூலாங்குறிச்சி
மு. சி. வி. நாராயணன் செட்டியார், கொ. லெட்சுமிபுரம்
அழ. வீர. வீரப்ப செட்டியார், கோ. அழகாபுரி
பெரி. வீர. சோமசுந்தரம் செட்டியார் பட்டமங்கலம்
உல. வ. வ. சி. சேது. நாராயண்ன் செட்டியார், காளையார்மங்கலம்
நா. க. ராம. பழநியப்ப செட்டியார், தேனிபட்டி
ராம. ரெ. ரெங்கனுதன் செட்டியார், கருங்குளம்
ராம. கரு. வெ. வெங்கடாசலம் செட்டியார், தாணிச்சாவூரணி
உ. தெ. உ. சா. தேனப்ப செட்டியார், கொ. அழகாபுரி
வயி. நா. க. ராம. சோம. கருப்பன் செட்டியார், அமராவதிபுதூர்
கண. பெரி. வெ. சின்னக்கருப்பன் செட்டியார், பனங்குடி
பழ. லெ. பழநியப்ப செட்டியார், சேலம்
கு. யெ. வி. மு. சுப்பிரமணியன் செட்டியார், ஈரோடு
தி. ராம. தி. சு. தி. பழநியப்ப செட்டியார், பொள்ளாச்சி
வ. தியாகராஜன் செட்டியார், லால்குடி
மெ. லெ. மெ. நாச்சியப்ப சேட்டியார், தூத்துக்குடி
சா. ராம. சாத்தப்ப செட்டியார், ஷண்முகநாதபுரம் (ஆருவயல்)
சுப. க. அ. நாராயணன செட்டியார், சோழபுரம்
கரு. முத்தப்ப செட்டியார், பிள்ளையார்பட்டி
சு. வி. நா. சுப்பிரமணியன் செட்டியார், மானகிரி
செ. சொ. சோமசுந்தரம் செட்டியார், சொக்கனுதபுரம்
உல. கயி. சித. கயிலாசம் செட்டியார், சக்கந்தி
கி. அ. சோம. அண்ணுமலை செட்டியார், செக்காலை
அ. வீர. அ. வீர. அடைக்கப்ப செட்டியார், பம்பாய்
நா. அ. நாச்சியப்ப செட்டியார், கோலாலம்பூர் (மலேசியா)
கரு. வ. அழகப்ப செட்டியார், க. முத்துப்பட்டணம்
க. வெ. சித. வேங்கடாசலம் செட்டியார், கானுடுகாத்தான்
அரு. லெ. வெ. நடராஜன் செட்டியார், கோயம்புத்தூர்
நா. அ. சுப்பிரமணியன் செட்டியார், தஞ்சாவூர்
மு. அழ. அழகப்ப செட்டியார், பெங்களூர்
மா. முத்தையா, B.A., B.L. திண்டுக்கல்
பெ. மு. சுப்பையா செட்டியார், கரூர்

| | |
|---|---|
| சி. வீர. வீரப்ப செட்டியார், (S. VR.) | இராமனுதபுரம் |
| KP. SP. சுப்பிரமணியன் செட்டியார், | உசிலம்பட்டி |
| அ. மெ. அ. பழநியப்ப செட்டியார், | செய்கோன் |
| சுப. நா. அண. கண்ணப்பா வள்ளியப்பா, | கல்லல் |
| சுப. நா. சு. நா. நாராயணன் செட்டியார், | கல்லுப்பட்டி |
| கண. சு. கண. ராமனுதன் செட்டியார், | மதகுபட்டி |
| AR. அண்ணுமலே செட்டியார், | திருச்சி |
| சி. நெ. வீர. நா. சுப்பிரமணியன் செட்டியார், | ,, |
| கதி. ராம சுப்பிரமணியன் செட்டியார், | புதுக்கோட்டை |
| மு. ராம. சுப. சுவாமிநாதன் செட்டியார், | திருப்பூர் |
| டாக்டர் முரு. முத்தய்யா செட்டியார், | மதுரை |
| அழ. அ. நா. நாராயணன் செட்டியார், | ,, |
| அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார், | திருவனந்தபுரம் |
| சி. அரு. சின. ராமனுதன் செட்டியார், | தேனி |
| M. A. சிதம்பரம் செட்டியார், | சென்னே |
| ப. செ. சு. கதி. சொ. வள்ளியப்ப செட்டியார், | முத்துப்பேட்டை |
| எ. மு. விஸ்வநாதன் செட்டியார், | பட்டுக்கோட்டை |
| உ. வீர. சோம. வீர. சிதம்பரம் செட்டியார், | கும்பகோணம் |
| கூ. க. வயி. சொ. சொக்கலிங்கம் செட்டியார், | பெரியகுளம் |






## நமது கிளை சத்திரங்களின் முகவரி

1. ஸ்ரீ காசி. (வாரணுசி)
The Agent, Nattukkottai Nagara Chatram,
Gudhowlia, Varanasi-1, U. P. Phone: 62076
''நகரச்சத்திரம்'' வாரணுசி என்று
தந்தி சொன்னுல் போதியதாகும்.

2. கல்கத்தா (காளிகாட் தாரகேசுவரம் இதில் சேர்ந்தது)
The Agent, Nagarathar House,
34, Ezra Street, Calcutta-1,
Tel. Address "NATTUKOT"

3. பிரயாகை.
The Agent, Nattukkottai Nagara Chatram,
149, Mori Daraganj P. O. Allahabad–6, U. P.

4. கயா.
The Agent, Nattukkottai Nagara Chatram,
Chand Choura, Gaya, Bihar.

5. அயோத்தி.
The Agent, Nattukkottai Nagara Chatram,
Ayodhya, Fyzabad, (U. P.)

6. பஞ்சவடி (நாஸிக்)
The Agent, Nattukkottai Nagara Chatram,
Kartikswami Mandir,
Panchavati, Nasik-3, Maharashtra,

7. இராஜமகேந்திரபுரம் கோதாவரி
The Agent, Nagara Madam, 9/70. Aryapuram,
Rajahmundry, P. O. Godavari (Andhra Pradesh)

* * *

மதுரைக் கட்டிடம்
230, கீழ மாரட்டு வீதி

காரைக்குடி அலுவலகம்
மேலமடம், காரைக்குடி